4 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண்: எம். 8798

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 11 மதுரை 29—12—73 சனி மலர் 296

## அசாம் அரசு ஊழியர் வேலைநிறுத்தம்

ஷில்லாங், டிச. 24—

விலைவாசி உயர்வினல் வாழ்க்கை நடத்தமுடியாமல் ஊதிய உயர்வு கோரி அசாம் மாநிலத்தில் 52 ஆயிரத்துக்குமேற்பட்ட அரசு ஊழியர்கள் காலவரையற்ற வேலை நிறுத்தத்தைத் தொடங்கியுள்ளனர்.

## பாண்டிச்சேரி சட்டசபைக்கு பிப். 24-ல் தேர்தல்

புதுடெல்லி, டிச. 27—

பாண்டிச்சேரி சட்டசபைத்தேர்தல்கள் 1974-ம் வருடம் பிப்ரவரி மாதம் 24-ம்தேதி நடைபெறவிருக்கிறது. ஒரிசா சட்டசபைக்கும் அன்றையதினம் தேர்தல் நடைபெறும்

உத்திரப்பிரதேசத்தில் பிப். 24, 26 ஆகிய 2 நாட்களிலும் மணிப்பூரில் 20, 23, 25 ஆகிய மூன்றுநாட்களிலும் நாகலாந்தில் 12, 14, 16 ஆகிய தேதிகளிலும் சட்டசபைத் தேர்தல்கள் நடைபெறும், எல்லா இடங்களிலும் ஓட்டு எண்ணிக்கை, 26-ம் தேதி ஆரம்பமாகும்- இத்தகவல்களை முக்கிய தேர்தல் கமிஷனர் வெளியிட்டார்.

### சிந்தன்சிந்திய ரத்தம் வீண் போகாது

## கருணாநிதி அரசின் அடக்குமுறையைச் சந்திப்போம்

### சென்னைதொழிலாளர்பேரணியில் தோழர் ஆர். உமாநாத் முழக்கம்

சென்னை, டிச. 26—

**தொழிலாளிவர்க்கம் எழுச்சியுறுவதையும் சி.ஐ.டி.யூ. வளருவதையும் கண்டு கருணாநிதி அரசு அடக்குமுறையை ஏவிவிட்டுள்ளது என்றும், சி ஐ. டி. யூ வுக்கு எதிராக விடுக்கப்பட்டிருக்கும் சவாலை எதிர்த்து முறியடிப்போம என்றும் சி. ஐ, டி. யூ. வின் தமிழ் மாநில பொதுச் செயலாளர் தோழர் ஆர். உமாநாத் கூறினர்.**

சென்னையில்நடைபெற்ற சி ஐ டி யூ மாநாட்டின் இறுதி நாளன்று சென்னை கடற்கரையில் நடைபெற்ற பிரம்மாண்டமான பொதுக்கூட்டத்தில் அவர் பேசினர்.

அவருடைய பேச்சு வருமாறு:—

குமரியிலிருந்து சென்னை வரை தொழிலாளி வர்க்கப் போராட்டத்தில் புடம்போட்டு எடுக்கப்பட்ட பிரதிநிதிகள் மாநாடு நான்கு நாட்களாக நடைபெற்றது.

கடந்த 2½ ஆண்டுகளாக தொழிலாளர் வர்க்கப் போராட்டங்களை ஒடுக்குவதற்கு தி மு க அரசு கட்டவிழ்த்து விட்டிருக்குக்கும் அடக்குமுறை பயங்கரமானது. இந்த அடக்குமுறையால் அழிந்து விடக்கூடியதல்ல எங்களுடைய இயக்கம்.

சிந்தனைத் தாக்கி அவருடைய சுவாசப் பையைக் கிழிக்கும் அளவுக்கு இந்த ஆட்சியாளரின் கொலை வெறித்தாண்டவம் சென்றுள்ளது. சிந்தன் சிந்திய ரத்தம் வீண்போகாது.

**சவாலை ஏற்கிறோம்**

வேலை நிறுத்தத்துக்குத் தடை, பாதுகாப்புக் கைதியாக தொழிலாளர் தலைவர்களை பிடித்துவைப்பது, கொலை செய்வது, லாக்கப்பில் சித்திரவதை செய்வது பொய் கேசு போடுவது இந்த முறைகளால் எல்லாம் சி ஐ டி யூவின் வளர்ச்சியைத் தடுத்துவிட கருணாநிதி அரசு முயலுகிறது.

இந்தச் சவாலை நாங்கள் ஏற்கிறோம். அடக்குமுறையினுல் சி ஐ டி யூ அழியவில்லை. அதன் பலம் கடந்த 2½ ஆண்டுகளில் இரட்டிப்பாகியுள்ளது.

கருணாநிதி அரசு தனது அடககுமுறை கொள்கையால் இன்று பொதுமக்களிடயிருந்து தனிமைப்பட்டுளளது.

இந்த அரசின் போலீஸ் கையில் சிக்கிய மாணவர்கள் அடித்து நொறுக்கப்பட்டனர். பாளையங்கோட்டையிலும் திருச்சி கிளைவ் ஆஸ்டலிலும் போலீஸ் வெறியாட்டத்தை கண்டித்து லட்சக்கணக்கான மாணவர்கள் இன்று தெருவில் இறங்கியுள்ளனர்.

சில அதிகாரிகள் செய்த அத்துமீறலுக்கு தாம் ஏன் பொறுப்பேற்க வேண்டும் என்று இப்போதுகருணாநிதி கேட்கிருர்.

இந்த அத்துமீறல் அதிகாரிகளின் தவறு? தி. மு. க. அரசின் போலீஸ்கொள்கையைத்தான் அதிகாரிகள் நிறைவேற்றினர்.

சிம்சனில்தொழிலாளர்களின் மண்டையை உடைத்த போலீஸ் தான் திருச்சி கிளைவ் ஆஸ்டலுக்குள்ளும் நுழைந்துள்ளது, பாளையங்கோட்டையில் பேராசிரியர் தாக்கப்பட்டதும் மாணவர்கள் தாக்கப்பட்டதும் தி. மு, க. அரசின் போலீஸ் கொள்கையின் விளைவே.

இந்த போலீஸ் கொள்கையை தி. மு. க. அரசு ஏன் வைத்திருக்கிறது.

ஆட்டின் ரத்தத்தைக் குழாய்மூலம் உறிஞ்சுவது போல் தொழிலாளி ரத்தத்தை முதலாளி உறிஞ்சுகிருன், அப்படி உறிஞ்சும்போது துடிப்பதற்குக்கூட கருணாநிதி அரசு அனுமதிதரவில்லை. ரத்தத்தை உறிஞ்சும் குழாய் ஆடுவதால் முதலாளிக்கு இடைஞ்சல் ஏற்படக்கூடாதுஎன்று கருதி துடிப்பதற்குக்கூட உரிமை அளிக்காமல் தொழிலாளிகள் தாக்கப்படுகிருர்கள்.

கருணாநிதி அரசும், இந்திரா அரசும் கடைப் பிடிக்கும் தொழிலாளி வர்க்க விரோதக் கொள்கைக்கு எதிராக தொழிலாளி வர்க்க ஒற்றுமையை உருவாக்க இன்று முடிந்த சி ஐ டி யூ மாநாடு திட்டம் வகுத்துள்ளது.

**தொழிலாளி வர்க்கம் பணியாது**

இந்த அடக்குமுறையால் தொழிலாளி வர்க்கம் பணியாது. வேலையிழப்பு நாட்கள் 10 லட்சத்திலிருந்து 37 லட்சமாக உயர்த்திருப்பதே இந்த உண்மையைப் புலப்படுத்தும். தொழிலாளி வர்க்கம் ஒரு பாறை. அதில் மோதினுல் மோதுபவனின் மண்டைதான் உடையும்.

கருணாநிதி அரசின் கதை முடிந்து விட்டது என்று நான் சொல்லவில்லை. இதை இந்த அரசின் அதிகாரிகளே புரிந்து கொண்டுள்ளனர்.

நாகர்கோவிலில் ஊர்வலம் நடத்துவதற்கு போலீஸ் அதிகாரி கொடுத்த உத்தரவில் என்ன கூறப்பட்டிருந்தது தெரியுமா? ஊர்வலத்தில் கோஷங்கள் போடக்கூடாது என்று கூறப்பட்டிருந்தது. இந்த ஊர்வலம் செல்லுவதற்கான பாதையும் சுடுகாட்டுக்குபபோகும் பாதையாகக் குறிப்பிடப்பட்டிருந்தது. கருணாநிதி அரசு செத்துவிடும் என்பதைப் புரிந்து கொண்டுதான் சுடுகாட்டுக்குப் போகும் பாதையியில மௌன ஊர்வலம் நடந்த போலீஸ் அதிகாரி பயிற்சி செய்துள்ளார்.

திமுக அரசிடமிருந்து மேலும் மேலும் வரும் தாக்குதலை [illegible] எதிர்த்து நிற்போம் உழைப்பாளி மக்கள் ஒன்று பட்டு விட்டால் அடக்குமுறை தூள் தூளாகும் என்பதை கருணாநிதி அரசு புரிந்து கொள்ளட்டும்.

### ஒரேசமயத்தில் 5 மாநிலங்களில் தேர்தல்நடத்த முயற்சி

புதுடெல்லி, டிச. 27—

புதுச்சேரி, உத்திரப்பிரதேசம், ஒரிசா, மணிப்பூர், நாகாலாந்து ஆகிய மாநிலங்களின் சட்டமன்றத் தேர்தல்களை ஒரே சமயத்தில் நடத்த முயற்சிக் கப்படும் என்றும். ஆனல் இது சம்பந்தமாக திட்டவட்டமான உறுதிமொழி எதையும் தம்மால் அளிக்க இயலாது என்றும் பிரதம தேர்தல் கமிசனர் டி. சுவாமிநாதன் கூறினர்.

இந்தத் தேர்தல்களுக்கான தேதிகள் இன்னும் இறுதியாக நிர்ணயிக்கப்படவில்லை என்றும், ஆயினும் உ. பி. சட்டமன்றத்தின்பதவிக்காலம் மார்ச். 5-ந் தேதியோடுமுடிவடைவதால் அந்தத் தேதிக்குள் தேர்தல்களை நடத்தவேண்டியிருக்கும் என்றும் தேர்தல் கமிசனர் கூறினர்.

### சோஷலிச இலட்சியத்தை அடைய

# சுதந்திரமான பாதையை வகுப்போம்

## கேரள விவசாயத் தொழிலாளர் மாநாட்டில் தோழர் எம். பசவபுன்னையா முழக்கம்

கோழிக்கோடு, டிச. 25—

**சோவியத் யூனியன், சீன ஆகிய நாடுகளிலுள்ள கம்யூனிஸ்ட் கட்சி தலைமைகளின் தவருன அறைகூவல்களை புறக்கணித்துவிட்டு, இந்திய மக்கள் அவர்களுக்கே உரிய பாதை வாயிலாக சோஷலிச லட்சியம் நோக்கி முன்னேற வேண்டுமென்று கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யின் அரசியல் தலைமைக் குழு உறுப்பினர் தோழர் எம். பசவ புன்னையா கூறினர்.**

[illegible] தொழிலாளர் சங்க மாநாட்டின் இறுதி நாளானநேற்று இங்கு நடைபெற்றபொதுக் கூட்டத்தைத் துவக்கி வைத்து தோழர் பசவபுன்னையா பேசியதாவது:—

சீன கம்யூனிஸ்ட் கட்சியைப் பற்றியும், சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியைப் பற்றியும், மகத்தான அந்த இரு சோசலிஸ்ட் நாடுகள் பற்றியும் நாங்கள் அளவற்ற பெருமை கொள்கிரேம். ஆனல் அவர்கள் சொல்வதை எல்லாம் நம்மால் ஏற்றுக் கொள்ள முடியாது.

இந்தியாவுக்கு விஜயம் செய்த தோழர் பிரஷ்னேவ், இந்தியாவுக்கு ஒரு நல்ல 'நற்சான்றிதழ்' கொடுத்துள்ளார். நம்மால் அதை ஏற்றுக் கொள்ள முடியாது. நிலப்பிரபுத்துவத்தையும் ஏகபோக முதலாளித்துவத்தையும் உறுதியுடன் காக்கும் ஒரு அரசுதான் இந்திரா காந்தி அரசு.

நிலப்பிரபுக்களின் பணமும், நிலப்பிரபுக்களின் ஆட்களும் படைக்கின்ற எம். எல். ஏக்களும் எம். பி. களும் கட்டுப்படுத்தும் அரசு தான் இங்கிருக்கிறது.

எனவேதான், விவசாயிக்கு ஆதரவாகவோ, விவசாயத் தொழிலாளர்களுக்கு ஆதரவாகவோ ஏனைய உழைக்கும் மக்களுக்காவோ ஆட்சி நடத்த அவர்களால் இயலாதது. எனவே வேலையில்லாத் திண்டாட்டம் வளர்கிறது.

[illegible] கள், ரெயில்வே தொழிலாளர்கள், ஆசிரியர்கள், தொழிலாளர்கள் எல்லாம் போராட்டக் களத்தில் இறங்குகின்றனர். அந்தப் போராட்டங்களை அடக்கி ஒடுக்க போலீசின் எண்ணிக்கை பன்மடங்காக்கப் படுகிறது. சி. ஆர். பி. யின்

(4-ம் பக்கம் பார்க்க)

### காங்கிரசாட்சியில்

## வேலையில்லா திண்டாட்ட அவலம்

### 17 பேர் இடத்துக்கு ஒரு இலட்சம் பேர் மனு

கல்கத்தா, டிச. 27—

'ஒரு வேலைக்கு 17 பேர்களே தேவை' என்ற அறிவிப்பைக்கண்டுஆண்களும் பெண்களுமான — ஒரு லட்சம் பட்டதாரிகள், எம் ஏ, எம் எஸ் சி, எம் காம், பி ஏ பி எஸ்சி, பி காம் முதலிய பட்டங்களை பெற்ற இளைஞர்கள் மனுச் செய்துள்ளனர்.

வேலையில்லாக் கொடுமையின் அவலத்தை எடுத்துக் காட்டும் இந்த நிகழ்ச்சி எங்கு நடந்துள்ளது தெரியுமா?

சித்தார்த்த சங்கர்ரேயை முதலமைச்சராக கொண்டு இந்திரா காங்கிரஸ் கட்சி ஆட்சி புரியும் மேற்கு வங்க மாநிலத்தில்தான்.

சமூகக் கல்வியின் விஸ்தரிப்பு அதிகாரிகளுக்கான 17 இடங்களுக்கு ஆட்கள் தேவை என்றும், இந்த வேலைக்கு குறைந்த பட்ச கல்வித் தகுதி இளங்கலை பட்டம்(கிராசுவேட்) பெற்றிருக்க வேண்டும் என்றும் மேற்கு வங்க மாநில அரசு விளம்பரம் செய்திருந்தது.

மேலும், இந்த வேலையில் அமருபவர்களுக்கு — இளம் பட்டதாரிகளானுல் ரூ. 300 லிருந்து 600வரையும், முதுகலைப் பட்டதாரிகளானுல் (போஸ்ட் கிராசுவேட்) ரூ 375லிருந்து 650வரையும் சம்பளம் வழங்கப்படும் என்றும், ஒவ்வொரு வட்டாரத்திலும் (பிளாக்) ஒரு ஆண் அதிகாரியும். ஒரு பெண் அதிகாரியும் நியமிக்கப்படுவார்கள் என்றும் அறிவிப்பு செய்யப்பட்டிருந்தது.

இந்த விளம்பரத்தைக் கண்டதும். வேலையில்லாது வாடி வதங்கிப் போய் சோர்வுற்றிருந்த பட்டாளம் — இளங்கலைப் பட்டமும், முதுகலைப் பட்டமும் பெற்ற ஆண், பெண் பட்டதாரிகள் ஒரு இலட்சம் பேர் மனுச் செய்துள்ளனர்.

17 பேர்களேதேவையான ஒரு வேலைக்கு — அதுவும் பாதி ஆண்களும், பாதிப் பெண்களும தேவைப்படும் வேலைக்கு— ஒரு இலட்சம் பேர் மனுச் செய்ததைக் கண்ட சமூகக் கல்வி இலாகா அதிகாரிகள் பெரும் திகைப்புற்றனர்.

எனவே, இந்த ஒரு இலட்சம் பேருக்கும் நேரடிப் பேட்டி (இண்டர்வ்யூ) வைப்பது இயலாது என்றும் எனவே எழுத்துத் தேர்வு வைத்து அதில் தகுதியானவர்கள் என்று தேர்ந்தெடுக்கப்படுபவர்களை நேர்முகப் பேட்டிக்கு அழைப்பதுஎன்றும் முடிவு செய்துள்ளனராம்.

26 ஆண்டுகால காங்கிரசாட்சியின் சாதனை 17 பேர் வேலைக்கு ஒரு இலட்சம் மனுச் செய்துள்ளதுதான்!

### சோவியத் விண்வெளி வீரர்கள்

## 8 நாட்கள் பூமியை சுற்றிவிட்டு தரையிறங்கினர்

மாஸ்கோ, டிச. 27—

சோவியத் யூனியன் அனுப்பியிருந்த சோயூஸ்-13 விண்வெளிக் கபபல் 8 தினங்கள் பூமியைச் சுற்றிவிட்டு இந்திய நேரப்படி நேற்று (புதன்) பகல் 2-20 மணிக்கு பத்திரமாகத் தரை இறங்கியது. அதில் பயணம செய்த இரு விண்வெளிவீரர்களும் நல்ல ஆரோக்கியத்துடன் உள்ளனர். இத்தகவலைசோவியத் செய்திஸ்தாபனமான 'டாஸ்' அறிவித்தது.

சோவியத் விண்வெளி வரலாற்றிலேயே அதிக நாட்கள் விண்வெளி வீரர்கள் இருந்ததில் இந்த பயணம் மூன்ரும் இடம் பெறுகிறது.

சோவியத் நாட்டின் மத்திய ஆசியப் பகுதியில் காகஸ்தானில் உள்ள காகண்டா சமவெளியில் இந்த விண்வெளிக்கப்பல் பாராசூட் மூலம் பத்திரமாக தரையிறங்கியது. இறங்கும் போதும் விண்வெளி வீரர்கள் ரேடியோ தொடர்பு கொண்டிருந்ததால் தரையில் தேடும் கோஷ்டியினர் இவர்களை உடனடியாக கண்டுபிடித்தனர்.

இவ்விரு வீரர்களும் பூமிக்குத் திரும்பியபோது கடும் பனிப் புயலும், பலத்த காற்றும் அடித்துக்கொண்டிருந்தது. இதனுல் அவ்வீரர்களுக்கு ஆபத்து ஏதும் ஏற்பட்டுவிடுமோ என்று பூமியிலிருந்தவர்கள் பயந்தனர் என்றும். ஆனுல் எவ்வித ஆபத்துமின்றி பத்திரமாக தரையிறங்கினர் என்றும விண்வெளிப் பயிற்சித் தலைவர் சாடலோவ் தெரிவித்தார்,

## மண்ணின் மக்களின் மாபெரும் ஊர்வலம்

கோழிக்கோடு, டிச. 25—

கேரள விவசாயதொழிலாளர் சங்கமூன்ருவதுமாநாடு நேற்று இங்கு முடிவடைந்ததையொட்டி விவசாயத் தொழிலாளர்களின் மிகப்பெரும் ஊர்வலமும் பொதுக் கூட்டமும் நடைபெற்றன.

ஊர்வலத்துக்கு மாநில விவசாயத் தொழிலாளர் சங்கச் செயலாளர் தோழர் வி, எஸ். அச்சுதானந்தன், செயலாளர் பி,கே. குஞ்ஞச்சன் ஆகியோர் தலைமைவகித்தனர்.

தலைவர்களுக்குப்பின்னுல் பிரதிநிதிகளும் அவர்களுக்குப்பின்னுல் ஆயிரக்கணக்கான விவசாயத் தொழிலாளிப் பெண்களும் அவர்களது குழந்தைகளும் அதற்கும் பின்னுல் சேருடு சேருகப்பாடுபடும் விவசாயத் தொழிலாளர்களும் அணிவகுத்துச் சென்றனர்.

ஊர்வலம் பொதுக்கூட்ட மைதானத்தை அடைந்த போதுமானுஞ்சிறை மைதானம் மக்கள் கடலாகமாறியது. ஊர்வலத்தில் வந்த அனைவருக்கும்அந்தப்பெரிய மைதானத்தில்இடம்கிடைக்காததால் ஒரு பகுதியினருக்குத் திரும்பிச்செல்ல வேண்டிய நிலை எற்பட்டது.

ஊர்வலம் சென்றஇடங்களில் எல்லாம் வெகுஜன இயக்க தொண்டர்கள் இடிமுழக்கமென கோஷம் முழக்கி வாழ்த்துத் தெரிவித்தனர்,

# தீக்கதிர்

## சிலி நிகழ்ச்சியும் ரகுநாத ரெட்டியின் புரட்டும்

சிலி நாட்டின் சம்பவத்தைக் காட்டி இந்திய தொழிலாளி வர்க்கத்துக்கு இந்திய அரசின் தொழிலாளர் அமைச்சர் ரகுநாதரெட்டி எச்சரிக்கை விடுத்துள்ளார். இந்தியாவில் தொழிலாளர்கள் அனுவசியமாக வேலை நிறுத்தம் செய்யக் கூடாது என்றும், உற்பத்திக்குத் தடை செய்யக் கூடாது என்றும், சோசலிசசக்திகளைப் பலவீனப் படுத்தக் கூடாது என்றும் அமைச்சர் ரகுநாதரெட்டி பேசியிருக்கிறார்.

சிலிநாட்டில் நடந்துள்ள சம்பவம் என்ன? இந்தியாவின் நிலைமை என்ன?

உண்மைகளை மறைத்தும், திரித்துக் கூறி தொழிலாளர்களின் கைகளைக் கட்டிப்போட அமைச்சர் ரகுநாத ரெட்டி முயன்றிருக்கிறார்.

சிலி நாட்டில் ஆட்சிக்கு வந்த அலென்டி அரசு அந்நிய ஏகபோக முதலாளிகளுக்கும் உள்நாட்டுப் பிற்போக்கு சக்திகளுக்கும் எதிராக உறுதியான நடவடிக்கை எடுத்தது. அதனால் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் சதி செய்து, ராணுவத்தை பயன்படுத்தி மக்களால தேர்ந்தெடுக்கப்பட்ட அரசை கவிழ்த்து ராணுவ சர்வாதிகார ஆட்சியை நிறுவியுள்ளனர். சிலியின் உள்நாட்டு விவகாரங்களில் அந்நியக் குறுக்கீடு இருந்ததையும், அதன் மூலம் அலென்டி அரசு கவிழ்க்கப்பட்டதையும், பிரதமர் இந்திரா காந்தியே ஒப்புக்கொண்டுள்ளார்.

இந்திய நாட்டில் அந்நிய ஏகபோக முதலாளிகளுக்கும், இந்திய ஏகபோக முதலாளிகளுக்கும் எதிராக எந்த நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.

அதற்குப் பதில் புதுப் புது சலுகைகளை அளித்து நம் நாட்டிலும் அந்நிய மூலதனத்துக்கும் பல நாட்டு கூட்டு ஸ்தாபனங்களுக்கும் இந்திய அரசு அழைப்பு விட்டுள்ளது. சிலி நாட்டின் அனுபவத்தைக் கண்ட பிறகும் பல நாட்டு கூட்டு ஸ்தபனங்களை அழைப்பதால் நம் நாட்டின் சுதந்திரத்துக்கு ஏற்படக்கூடிய ஆபத்தைப் பற்றி இந்திய அரசு கவலைப்படவில்லை.

அந்நிய ஏகபோக முதலாளிகளுடன் கூட்டுச்சேரும் ஏகபோக முதலாளிகளை பலப்படுத்தும் இந்திய அரசின் அடிப்படை கொள்கையைமறைத்துவிட்டுஅமைச்சர் ரகுநாதரெட்டி சிலி நாட்டை மேற்கோள் காட்டியிருக்கிறார்.

சிலி நாட்டில் நிகழ்ந்துள்ளதைக் கண்ட பின்னும் நம் நாட்டிலும் சி. ஐ. ஏ. உளவாளிகள் சதி வேலைகளில் இறங்குவதைத் தடுப்பதற்கு இந்திய அரசு நடவடிக்கை எடுக்கவில்லை.

பி. எல். 480 நிதியை இந்தச் சதி வேலைகளுக்குப் பயன்படுத்திக் கொள்ள வசதி அளிக்கும் முறையிலேயே அண்மையில் இந்திய அரசு அமெரிக்க அரசுடன் ஒப்பந்தம் செய்து கொண்டுள்ளது.

சிலி நாட்டின் நிலைமையிலிருந்து இந்தியாவின் நிலைமை முற்றும் மாறுபட்டது. இங்கு தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்வது முதலாளி வர்க்கத்தின் கொள்ளை லாபத்தை எதிர்த்தேயாகும். இந்திய அரசின் கொள்கைகளால் விலைவாசி ஏறிக்கொண்டிருக்கும் போது வாழ்க்கை நடத்த முடியாமல் தொழிலாளர்கள் ஊதிய உயர்வு கேட்டுப் போராடுகிறார்கள்.

முதலாளிகளின் கொள்ளையையும் விலைவாசி உயர்வையும் இந்திய அரசு கட்டுப்படுத்த மறுக்கிறது. இந்த நிலைமையில் முதலாளிகளின் கொள்ளையைப் பாதுகாக்கவும் மக்கள் மீது மேலும் மேலும் சுமையை ஏற்றவும் இந்திய அரசு முயலுகிறது.

விலைவாசி எவ்வளவு உயர்ந்தாலும் ஊதிய உயர்வு கேட்கக் கூடாது என்பதே இந்திய அரசின் கொள்கை.

அலெண்டே அரசின் கொள்கைக்கும் இந்திரா அரசின் கொள்கைக்கும் எந்தச் சம்பந்தமும் இருக்கிறது என்று கூற முடியுமா?

அலென்டி அரசுக்கு எதிராகத் தூண்டிவிடப்பட்ட நடவக்கைகளைப் போன்றதே இந்திய நாட்டில் தொழிலாளர்கள் மேற்கொள்ளும் வேலை நிறுத்தங்களும் என்று அமைச்சர் ரகுநாத ரெட்டி கூறுவது தொழிலாளி வர்க்கத்தையே பழிக்கும் நடவடிக்கையாகும்.

இந்த நெருக்கடி நேரத்தில் கூட முதலாளி வர்க்கத்தின் கொள்ளை லாபம் முன்னெப்போதும் இருந்திராத அளவில் அதிகரித்துள்ள போதிலும் உழைக்கும் மக்கள் வாழ்க்கை நடத்த முடியாத அளவுக்கு துன்ப துயரங்கள் பெருகிக் கொண்டிருந்தாலும் மக்கள் எந்த எதிர்ப்பு நடவடிக்கையிலும் இறங்ககூடாது என்று அமைச்சர் ரகுநாத ரெட்டி விரும்புகிறார். போராடும் மக்களின் கரங்களைக் கட்டிப் போடுவதே ரகுநாத ரெட்டியின் நோக்கமாகும். இந்த நோக்கத்துக்காக சிலியில் நடந்துள்ள நிகழ்ச்சிகளை ஒப்பிட்டு உண்மைகளைத் திரித்துக் கூற அவர் முற்பட்டுள்ளார்.

## கோவை தேர்தல் நிதி சென்னிமலையில் ரூ. 412

### ஒருமாத காலத்துக்கு மைக்செட் ஏற்பாடு

சென்னிமலை. டிச. 26—

கோவைநாடாளுமன்றஉப தேர்தலில் போட்டியிடும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கு, சென்னிமலையில் ரூ. 412 நிதியாக அளிக்கப் பட்டது.

கடந்த 22-ந்தேதி நடந்த சென்னிமலை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக் கமிட்டி கூட்டம் நடந்தது. தோழர் டி கே தங்கமுத்து தலைமை வகித்தார்.

கோவை உப தேர்தல் குறித்தும், 25—11—73 ந் தேதி விளாங்குறிச்சியில் நடந்த விரிவு படுத்தப்பட்ட மாவட்டக் குழுக் கூட்டத்தின் முடிவுகளை விளக்கியும் கிளைச் செயலாளர் தோழர் சி எஸ் பொன்னிச்சாமி பேசினார்.

இக் கூட்டத்தில், தேர்தல் நிதிக்கு தியாகி சிவராமன் மன்றத்தின் சார்பில் ரூ. 151ம், சோசலிஸ்டு வாலிபர் முன்னணியின் சார்பில் ரூ. 61ம், கட்சிக் கிளைகள்

(8-ம் பக்கம் பார்க்க)

## நாடெங்கும் நாசச் செயல்களில் ஈடுபட்டுள்ள சி·ஐ·ஏ·ஏஜண்டுகள்

அந்த நபரை நீங்களும் பார்த்திருப்பீர்கள். அவரது நடவடிக்கைகளையும் கூட, அறிந்திருப்பீர்கள். எனினும் அந்த நபர் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு விதமாகக் காட்சியளிப்பார். ஓரிடத்தில் 'உதவி' புரியும் தொண்டராகவும், மற்றோர் இடத்தில் ராஜதந்திரியாகவும், பிறிதோரிடத்தில், பெரிய கல்வியாளராகவும் காட்சியளிப்பார். ஆளைப் பார்த்தால் இந்தப் பூனையும் பால் குடிக்குமா என்று தான் தோன்றும்; அத்தனை அப்பாவியாகத் தோன்றுவார்.

ஆயினும் அந்த நபரைக் கண்டு ஏமாந்து விடாதீர்கள். ஏனெனில் அந்த நபர் தமது எஜமானர்களின் கட்டளைகளைநிறைவேற்றுவதற்காகத்தான் அத்தனை வேடமும் போடுகிறார். சரி, யாரவர்? அவர்தான் திருவாளர் சி ஐ ஏ ஏஜெண்ட்!

### செல்லாத இடமில்லை

சி ஐ ஏ என்ற அமெரிக்க உளவு ஸ்தாபனத்தின் தலையீட்டோடு உலகில் காரியங்கள் நிகழாத நாளே இல்லை எனலாம். இந்த ஸ்தாபனம் தனது நோக்கங்களைப் பூர்த்தி செய்து கொள்ள எதுவும் செய்யத் தயங்குவதில்லை.

உலகின் எந்தவொரு பகுதியில் ஏதாவது தகராறுகள் நிலவினாலும், சி ஐ ஏ உடனே அங்கு புகுந்து விடுகிறது.

உலகில் எங்கேனும் ஆட்சிக் கவிழ்ப்போ, தலைவர்களின் படுகொலையோ நிகழுமானால், அதற்குப் பின்னணியில் சி ஐ ஏ யின் கைவரிசையும் சதியும் இல்லாமற் போவது மிக அபூர்வம்.

### சிலியில்

சமீப காலத்தில் சி ஐ ஏ பல்வேறு வடிவங்களில் இத்தகைய காரியங்களில் அதிகமாக ஈடுபட்டு வந்துள்ளது. இந்த ஸ்தாபனம் தனது வேடத்தையும் மாற்றிக் கொள்கிறது,

இன்டர் நேஷனல் டெலிபோன் அண்டு டெலிகிராப் கார்ப்பரேஷன் (ஐ டி டி) என்ற அமெரிக்க ஏகபோக முதலாளித்துவ ஸ்தாபனத்தைப் பயன்படுத்தி சி ஐ ஏ எவ்வாறு சிலி நாட்டில் சதி வேலைகளில் ஈடுபட்டு, இறுதியில் அந்த நாட்டின் அரசாங்கத்தை ராணுவத்தின் மூலம் கவிழ்த்து விட்டது. என்பது இன்று உலகறிந்த செய்தியாகும்.

பங்களாதேஷ் விடுதலை இயக்கத்தின் போதும் சி ஐ ஏ தனது நடவடிக்கைகளை அதிகரித்தது; பங்களாதேஷ் அகதிகளிடையே துஷ்பிரசாரம் செய்து அவர்களில் பலரை விலைக்கு வாங்கவும் முயன்றது.

### ஆசியாவில்

ஆசிய நாடுகளின் தலைநகரிலுள்ள அமெரிக்க ஸ்தாபனங்கள்; சி ஐ ஏ யை வாஷிங்டனிலுள்ள ஒரு விஞ்ஞான ஆராய்ச்சி ஸ்தாபனம்தான் என்றும், அதனோடு சம்பந்தப்பட்டவர்கள் ஆசிய மண்ணில் காலடி வைப்பதே இல்லை என்றும் தான் கூறமுயன்று வருகின்றன. என்றாலும், பங்களாதேஷில் பாகிஸ்தானிய ராணுவ ஆட்சிக் கும்பல் நடத்திய இனப் படுகொலையில் சி ஐ ஏக்கும் பங்கு உண்டு என்பது என்றோ அம்பலமாகி விட்டது.

தாய்லாந்திலும் சி ஐ ஏ மும்மரமாகச் செயல்பட்டு வருகிறது. சி ஐ ஏ ஏஜெண்டுகள் லாவோசில்" பிரத்தியோகப் போரை"யே நடத்த உதவி வந்தனர். வியத்நாமிலும் அவர்கள் அமெரிக்க விமானிகளின் குண்டுவீச்சுகளுக்கு உதவினர். சைகோனிலிருந்து சி ஐ ஏ யின் நடவடிக்கைகள் வேறு பலநாடுகளுக்கும் விரிவடைந்தன, கமபோடியாவில் 1970 மார்ச்சில் நடந்த ஆட்சிக் கவிழ்ப்பு, சி ஐ ஏ போட்டுக் கொடுத்த திட்டப்படிதான் நடந்தன என்பதைக் கம்போடியாவின் பிரதமரே அண்மையில் கூறியுள்ளார்.

### இந்திய அறிவாளிகள் மத்தியில்

இந்தியாவிலும் சி ஐ ஏ தனது கைவரிசைகளைக் காட்டத் தவறியதில்லை அமெரிக்க ஏகபோக பெரு [illegible] பட்டுள்ள அமெரிக்க பவுன்டேஷன்கள், சிஐஏக்குப் பணியாற்றுவதற்காக விஞ்ஞானிகளையும், அறிஞர்களையும் தம் பக்கம் இழுக்கும் காரியத்தை வெகு சாமர்த்தியமாகப் புரிந்து வருகின்றன. ஏராளமான பணபலத்தோடும், அதிகார பலத் பலத்தோடும், விளங்கும் சி ஐ ஏ யும் அமெரிக்க பவுன்டேஷன்களும் இந்திய அறிவாளிகள் மத்தியில் மும்முரமாகச் செயல்பட்டு வந்ததாக நியூயார்க் டைம்ஸ் பத்திரிகையே எழுதியது. இந்திய நாட்டின் வட பகுதியிலுள்ள வகுப்பு ஸ்தாபனங்கள் மத்தியிலும் சி ஐ ஏ ஊடுருவியுள்ளதாகச் செய்திகள் வெளி வந்திருக்கின்றன.

மேலும், சி ஐ ஏ உத்தரவின்படி, இந்தியாவிலுள்ள அமெரிக்கத் தொழில் நிறுவனங்கள், அரசியல் கட்சிகளைச் சேர்ந்த சில கோஷ்டிகளுக்குச் சகலவிதமான ஆதரவும் அளித்து, தேர்தல் விஷயங்களில் ஈடுபடுவதாகவும் பலமுறை செய்திகள் வெளிவந்துள்ளன.

பாண்டிச்சேரி உபதேர்தலின் போது அரியாங்குப்பத்தில் அமெரிக்கக் கான்சல் அலுவலகத்தைச் சேர்ந்த கார்கள் நடமாடியதாக ஒரு தமிழ்ப் பத்திரிகை எழுதியது. இந்தக் கார்கள் அந்தச் சமயத்தில் அங்கு போனதேன் என்று ஊகிப்பதில் பெரிய சிரமம் எதுவும் இல்லை.

சி ஐ ஏ ஏஜெண்டுகள் இப்போது இந்திய அதிகாரிகள் சிலரையும் ஒரு மத்திய காபினட் அமைச்சரையும்கூட தமது வலைக்குள் வளைத்துப் போட்டிருக்கிறார்கள் என்று செய்திகள் வருகின்றன என்றால் அவர் ஊடுருவல் எந்த அளவுக்கு இருக்கின்றது என்பதை எவரும் புரிந்து கொள்ளலாம்.

எனவே சி ஐ ஏ அபாயம் என்று கூறுவதெல்லாம் வெறும் பூச்சாண்டி என்று சிலர் கூறுவது சரிதானா என்பதை நாம் பார்க்க வேண்டும். அது ஒன்றும் பூச்சாண்டி அல்ல. உண்மையான அபாயம்தான். இந்த அபாயத்தைக்குறித்து இந்திய மக்கள்மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டாமா?

## அமெரிக்க படைக்கு ஜப்பான் எண்ணெய் தராது

டோக்கியோ, டிச. 25—

ஜப்பானில் குவிக்கப்பட்டுள்ள அமெரிக்க ராணுவத்துக்கு ஜப்பான் பெட்ரோல் மற்றும் எண்ணெப் பொருட்களை சப்ளை செய்து வந்ததை 1974 ஜனவரி மத்தியிலிருந்துநிறுத்திக்கொள்வதென்று ஜப்பான் அரசு முடிவு செய்துள்ளது.

இந்தஆண்டில் 100கோடி லிட்டர் எண்ணெயைஅமெரிக்க ராணுவத்துக்கு ஜப்பான் சப்ளை செய்து வந்தது. இனி அது நிறுத்தப்படும்.

## அரசு-அரசு சார்பு ஊழியர் ஆர்ப்பாட்டம் நடத்த முடிவு

புதூர், டிச. 25—

விளாத்திகுளம் கிளைக் கருவூல அதிகாரியின் தரக்குறைவான பேச்சுக்களையும், முறைகேடான செயல்களையும் கண்டித்து, 2'வது கட்டமாக ஜன. 2-ந் தேதி ஆர்ப்பாட்டம், ஊர்வலம் நடத்துவது என்று இவ் வட்டார அரசு - அரசு சார்பு ஊழியர் சங்கங்களின் ஒருங்கிணைப்பு முடிவு செய்துள்ளது.

இந்த ஆர்ப்பாட்ட ஊர்வலம் அன்று மாலை 4 மணியளவில் விளாத்திகுளத்தில் நடக்கும்.

மாவட்ட ஆட்சித்தலைவர், மாவட்ட கருவூல அலுவலர் ஆகியோரை கடந்த 10-ந் தேதியன்று நெல்லையில் தூதுக் குழுவினர் சந்தித்து கிளைக் கருவூல அதிகாரிகளின் போக்கு குறித்து உரிய நடவடிக்கை எடுக்கும்படி வற்புறுத்தியும், இதுவரை எவ்வித நடவடிக்கையும் மேற்கொள்ளப்படவில்லையாம்.

## டிச. 29 ல் தமிழகமெங்கும் டான்சி தொழிலாளர் ஆர்ப்பாட்டம்

சென்னை, டிச. 26—

தமிழ்நாடு சிறு தொழிலாளர் சம்மேளனத்தின் அவசர நிர்வாகிகள் கூட்டம் சம்மேளனத் தலைவர் தோழர் ஏ. பாலசுப்பிரமணியம் தலைமையில் தர்மபிரகாஷ் கல்யாண மண்டபத்தில் டிச. 21-ல் நடைபெற்றது. கூட்டத்தில் தோழர்கள் சி. கோவிந்தராஜன் டி. பி. கோவிந்தன் எஸ். ஏ. தங்கராஜ், தோழர் ப. காசிநாதன், சி, பி. தாமேதரன் மற்றும் பல நிர்வாகிகள் கலந்து கொண்டனர்.

26—8—73, 4—11—73 ஆகிய தேதிகளில் திருச்சியிலும் மதுரையிலும் டான்சி தொழிற்சங்கப் பிரதிநிதிகளின் கூட்டத்தில் எடுத்த முடிவுகள் பற்றி பரிசீலனை செய்து மேற்படி முடிவுகளை அமுல் படுத்திய அனைத்து டான்சி தொழிற் சங்கங்களுக்கும் நிர்வாகிகள் கூட்டம் பாராட்டுக்களைத் தெரிவித்து 17அம்சக் கோரிக்கைகள் விஷயமாக டான்சிதொழிற் சங்கங்கள் வேலை நிறுத்த நோட்டீஸ் கொடுத்து 1—10—73 அன்று ஒருநாள் அடையாள வேலைநிறுத்தம் செய்தும் டிசம்பர் 10, 11, 12 ஆகிய மூன்று நாட்களிலும் தொடர் உண்ணாவிரதம் மாநில ரீதியாக நடத்தியும் தமிழக அரசு மேற்படி கோரிக்கைகளை இது நாள் வரையிலும் அமுல் படுத்தாது கால தாமதப் படுத்துவதை நிர்வாகிகள் கூட்டம் வன்மையாகக் கண்டித்து தீர்மானம்நிறைவேற்றியது.

கடலூர் டான்சி தச்சு. கருமார், தொழிற்சாலை பில் சர்வீஸ் உள்ள தொழிலாளர்கள் தொழிற்சாலையில் பணியாற்றும் போது, தொழிற்சாலைக்கு சம்பந்தம் இல்லாத ஒரு நபரை முதல் கிரேடு தச்சராக (கிரேடு ரூ. 250) புதிதாக நியமனம் செய்த டான்சி நிர்வாகிகளின் முறைகேடான நடவடிக்கையை கூட்டம் கண்டித்து 22—11—73 முதல் மேற்படி உத்தரவை வாபஸ் பெறக்கோரியும், காலியாக உள்ள எல்லா ஸ்தானத்தையும் தொழிற்சாலையில் பணிபுரியும் தொழிலாளர்களைக் கொண்டே பூர்த்தி செய்யக்கோரியும் அனைத்து தொழிலாளர்களும் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்து வருவது குறிப்பிடதக்கது. மேற்படி தொழிலாளர்களின் போராட்டத்துக்கு ஆதரவாக அனைத்து டான்சி தொழிலாளர்களும் 29—12—73 தேதி அன்று தங்கள் தொழிற்கூடங்களுக்கு முன்பு ஆர்ப்பாட்டம்செய்து, மேற்படி தொழிலாளர்களின் கோரிக்கைகளை வற்புறுத்தி தீர்மானம் நிறைவேற்றி டான்சி நிறுவன இயக்குனருக்கும் தமிழக அரசுக்கும் அனுப்பபட வேண்டும் என்று சகல டான்சி தொழிலாளர் சங்கங்களையும் இக்கூட்டம் கேட்டுக் கொள்கிறது.

## ஆசிரியருக்கு...

### குடி தண்ணீர் பஞ்சம் ராசீபுரம் நகராட்சி கவனிக்குமா?

ஐயா,

சேலம் மாவட்டம் இராசிபுரம் நகராட்சியின் குடி தண்ணீர் திட்டத்தின் கீழ் அங்கீகரிக்கப் பட்ட கோனேரிப்பட்டி ஏரியாவில் இருக்கும் மக்கள் குடி தண்ணீரின்றி பெரும் அவதிக்குள்ளாகி யுள்ளார்கள். இப்பகுதியில் மொத்தம் 600 வீடுகள் உள்ளன.

இந்நகராட்சியின் குடி தண்ணீர் திட்டத்தின் கீழ் அங்கீகரிக்கப்பட்டுள்ள பிற பகுதிகளில் வைக்கப்பட்டுள்ளது போலவே இப்பகுதியில் 2 குழாய்கள் (பைப்) வைக்கப் பட்டுள்ளன. ஆனல் பிறபகுதியில் தண்ணீர் வருவது போல இந்த இரு பைப்புகளிலும் தண்ணீர் வருவதில்லை. 2 அல்லது 3 குடம் தண்ணீர் தான் வரும்.

இதுகுறித்து கவுன்சிலரைக் கேட்டால் ஏதோ ஓர் "கேட் வால்வு" போட வேண்டும் என்றும் அது வந்து பொருத்தப்பட்ட பின்புதான் தண்ணீர் வரும் என்றும் சொல்கிறார். இந்த 'வால்வு' எப்போது வருவது? குடி தண்ணீர் அவதி எப்போது நீங்குவது?

இதுநாள் வரை அக்கம் பக்கத்துத் தோட்டங்களில் சென்று ஓரிரு குடம் தண்ணீர் எடுத்து வந்தார்கள் இப்பகுதி மக்கள்.

அதற்கும் இப்போது பஞ்சம் ஏற்பட்டு விட்டது. காரணம் மழை இல்லை.

இப்பகுதியில் தண்ணீர் விடுவதற்காக ஒருவர் இருக்கின்றார். இவர் இன்று ஒரு வீட்டுக்குத் தண்ணீர் விட்டால், மறுநாள் அந்த வீட்டுக்குத் தண்ணீர் இல்லை என்று சொல்லி விடுகின்றாராம். இவருக்கு மாதச்சம்பளமாக ஒவ்வொரு குடும்பத்திலிருந்தும் 50 காசு கொடுத்து வந்ததை, இப்போது 60காசாகஉயர்த்திக் கொடுத்தால்தான் தண்ணீர் விடுவேன் என்று கூறுகிறாராம்.

எனவே, இப்படி குடி தண்ணீர் இல்லாமல்மிகவும் அவதிக்குள்ளாகியுள்ள இப் பகுதி வாழ் 600 குடும்பங்களின் அவதியைப் போக்க நகரசபை நிர்வாகமும், தலைவரும், பிற கவுன்சிலர்களும் முன் வருவார்களா?

இப்படிக்கு,

வி பி. அண்ணாமலை

இராசிபுரம்.

## ஏனோ மறந்தார்!

"சில ஆண்டு காலத்துக்கு வேலை நிறுத்தங்கள் ஆர்ப்பாட்டங்கள் முதலிய அனைத்தையும் ஒத்தி வைக்க வேண்டும்".

— மத்திய மந்திரி ரகுராமையா 25-ந் தேதியன்று ஐதராபாத்தில் நிருபர்கள் சங்கக் கூட்டத்தில் இவ்வாறு கூறியிருக்கிறார்.

திருவாளர் ரகுராமையா, விலைவாசி உயர்வை சில ஆண்டு காலத்துக்கு ஒத்திவைக்க வேண்டும் என்று ஒரு வார்த்தை சொல்ல ஏனோ மறந்து விட்டார்!

## விசாரணைக்கமிஷன் செலவுகள் கோடிக் கணக்கில் பொதுப் பணம் பாழ்

மத்திய அரசு பல்வேறு சம்பவங்களை யொட்டி விசாரணைக்கமிஷன்களைநியமிக்கிறதல்லவா? இந்த விசாரணைக் கமிஷன்களுக்கு என்று அரசு செலவழித்துள்ள பணத்தைப் பாருங்கள். (நாடாளு மன்றத்தில் தோழர் ஜோதிர்மாய் பாசுவின் கேள்விக்குக் கிடைத்த பதில்)

| | | |
|---|---|---|
| 1. | நேதாஜி விசாரணைக்கமிஷன் | ரூ. 2,29,597—00 |
| 2. | பஞ்சாபில் முன்னுள் அமைச்சர்களைப் பற்றிய ஊழல் குற்றச் சாட்டுகளின் மீதான விசாரணைக் கமிஷன் | ரூ. 42,926—28 |
| 3. | ஜீனி வர்த்தக விசாரணைக் கமிஷன் | ரூ. 7,47,681—73 |
| 4. | பைப் லைன் விசாரணைக் கமிஷன் | ரூ. 2,12,809—00 |
| 5. | டிராம்பே உர விசாரணைக் கமிஷன் | ரூ. 1,50,635—00 |
| 6. | ஏகபோக வர்த்தகங்களைப் பற்றிய கமிஷன் | ரூ. 19,91,928—00 |
| 7. | ஜனசங்கத்தலைவர் தீனதயாள் அவர்களின் மரணம் பற்றிய விசாரணைக் கமிஷன் | ரூ. 1,18,093—87 |
| 8. | 6—4—70 தேதியன்று நடந்த சோஷலிஸ்ட் கட்சி ஆர்ப்பாட்டம் பற்றிய விசாரணைக் கமிஷன் | ரூ. 52,758—00 |

இவற்றில் கடைசி இரண்டு விசாரணைக் கமிஷன்கள் மட்டுமே விசாரணையை முடித்துள்ளன.

எனவே, ஏனைய கமிஷன்களின் விசாரணைக்காக இன்னும் ரூபாய் செல்வாகும்.

## எண்ணெய் உற்பத்தி 10 சதம் உயர்த்த அரபு நாடுகள் முடிவு

குவைத், டிச. 25—

பெட்ரோலிய எண்ணெய் உற்பத்தி செய்யும் அரபு நாடுகள், 1974 ஜனவரி மாதத்தில் எண்ணெய் உற்பத்தியை 10 சதவிகிதம்அதிகரிப்பது என முடிவு செய்துள்ளன.

ஜனவரியில் எண்ணெய் உற்பத்தியில் மேலும் 5 சதவிகிதம் வெட்டுவது என்ற முன்னைய முடிவை அரபு நாடுகள் மாற்றிக் கொண்டன.

சவூதி அரேபியாவின் எண்ணெய்இலாகாஅமைச்சர் ஷேக் அகமது ஜாகிபமானி, இந்த அறிவிப்பை வெளியிட்டார்.

9 அரபு நாடுகளின் பிரதிநிதிகள் 9 மணிநேர ஆலோசனை நடத்தியபின், இந்த அறிவிப்பு வெளியிடப்பட்டது.

### அமெரிக்காவுக்கு ஏற்றுமதி தடை நீடிக்கும்

அமெரிக்காவுக்கு பெட்ரோலிய எண்ணெய் ஏற்றுமதி செய்ய அரபு நாடுகள் விதித்துள்ள ஏற்றுமதித் தடை தற்போதைக்கு நீடிக்கும் என்றும் சவூதி அரேபியாவின்எண்ணெய் இலாகா அமைச்சர் கூறினார்.

அமெரிக்காவின் போக்கு விரும்பத்தக்கதாக இருக்கிறது என்றும் ஆனல், எண்ணெய் ஏற்றுமதி தடையை நீக்குவதற்கு, அது மட்டும் போதாது என்றும் அவர் கூறினார்.

அரபு - இஸ்ரேல் போரில் இஸ்ரேலை அமெரிக்காவும் ஹாலந்தும் ஆதரித்ததால் அந் நாடுகளுக்கு எண்ணெய் ஏற்றுமதியை அரபு நாடுகள் தடை செய்தன.

அரபு பிரதேசங்களிலிருந்து இஸ்ரேல் வாபஸ் ஆக வேண்டும் என்ற அரபுநாடுகளின் கோரிக்கையை உலக நாடுகள் ஆதரிக்குமாறு வற்புறுத்த இதுவரை, தங்களது எண்ணெய் உற்பத்தியை அரபு நாடுகள் 25 சதவிகிதம் குறைத்துள்ளன.

## சோவியத் நாட்டில் துணி துவைக்க இயந்திரம்

மாஸ்கோ, டிச. 26—

ஆடைகளைச் சுத்தம் செய்வதும், சோவியத் யூனியனில் ஒரு பிரச்சினையே அல்ல. 40 ரூபிள்களிலிருந்து மின்சார சலவை எந்திரங்கள் விற்கப்படுகின்றன. பெருவாரியான வீடுகளில், இந்த எந்திரங்கள் உள்ளன. அவற்றில் நமது துணிகளையும் போட்டு, தண்ணீரையும், சோப்பையும் போட்டு, மின் இணைப்பைக் கொடுத்து விட்டால் சில நிமிடங்களில் அவை நன்கு சுத்தம்செய்யப்பட்டு, நீர் பிழியப்பட்டு விடுகின்றன. அவற்றை அப்படியே எடுத்து உலர்த்த வேண்டியதுதான்.

சலவை எந்திரங்கள் சொந்தத்தில் இல்லாதவர்கள் என்ன செய்வது? "நீங்களே செய்து கொள்ளுங்கள்" என்ற பெயர்ப் பலகையுடன் கூடிய, சிறு நிலையங்கள் ஆங்காங்கே உள்ளன.

வாரம் ஒரு முறை நாங்கள் எங்கள் துணி மூட்டையைக் கொண்டுபோய் அந்தக் கடைகளிலுள்ள எடைப் பலகையில் போட்டுவிட வேண்டும். துணி எண்ணிக்கையைப் பொருத்து அங்கு காசு கொடுக்கவேண்டாம். எடையைப் பொருத்துதான் கட்டணம்.

1 கிலோ துணியை வெளுப்பதற்கு 40 அல்லது 45 கோபெக்குகள் தான் கொடுக்கவேண்டும். பணத்தை எந்திரத்தில் போட்டுவிட்டு, வேறோர் எந்திரத்தில் துணியைப் போட்டபின்னர் 10 நிமிடத்தில் அவை சுத்தம்செய்யப் பட்டுவிடும். பின்னர் அவற்றை எடுத்து மற்றொரு எந்திரத்தில் போட்டால், துணிகள் நன்றாக அலசப்பட்டு, பிழியப்பட்டுக் கிடைக்கும், ஈரத் துணிகளைத் தூக்கிக் கொண்டு வரவேண்டுமென்ற அவசியம் கிடையாது. அங்குள்ள உஷ்ணப்பலகையின் மீது அவற்றைப் போட்டால் 10 நிமிடத்தில் நன்றாக உலர்ந்துவிடும். பின்னர் உஷ்ணத்துடன் உருண்டு வரும் உருளைகளிடையே ஒவ்வொரு துணியாக மடித்து வைத்தால், அவை நன்றாக 'இஸ்திரி' போடப்பட்டு விடுகின்றன. அவற்றை அப்படியே எடுத்துக்கொண்டு வரவேண்டியது தான்.

# இந்தியத் தொழிலாளிகளுக்கு பொறுப்பாளி யார்?

## இந்தியக் கம்யூனிஸ்டுகளா? அல்லது சோவியத் யூனியனும் மக்கள் சீனமுமா?

## எம். பசவபுன்னையா கேள்வி

[நேற்றைய தொடர்ச்சி]

**சோஷலிஸ்ட் நாடுகள் இந்தியாவுக்கு வழங்கும் உதவிகளையும், இந்திய—சோவியத் நட்புறவு ஒப்பந்தங்களையும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி எதிர்ப்பதாக, வலது கம்யூனிஸ்ட் தலைவர்கள் செய்து வரும் அவதூறுப் பிரச்சாரத்துக்கும் பொய்ப் பிரச்சாரத்துக்கும் சரியான சம்மட்டி அடி கொடுத்து-மறுக்க முடியாத ஆதாரங்களோடு "பீப்பள்ஸ் டெமாகிரசி" யில் தோழர் பசவபுன்னையா எழுதியுள்ள கட்டுரையில் ஒரு பகுதியை நேற்றைய தீக்கதிரில் வெளியிட்டிருந்தோம். அதன் தொடர்ச்சியை இன்று வெளியிடுகிறோம்.**

இந்தியக் கம்யூனிஸ்டுகள் தங்களுடைய புரட்சிகர கடமைகளை இந்தியாவிலுள்ள விசேஷ நிலைமைகளுக்கு ஏற்றவாறு ஆற்ற வேண்டுமல்லவா?

### இந்தியாவின் விசேச நிலை

அப்படியானால், இந்தியாவில் இன்று உள்ள விசேஷ நிலைமைகள் என்ன?—என்பதைப் பரிசீலிப்போம்.

எல்லாவற்றுக்கும் முதலாக, இந்தியாவில் ஒரு முதலாளித்துவ—நிலப்பிரபுத்துவ அரசாங்கம் இருக்கிறது. அது, இரண்டு உலக முகாம்களாகப் பிரிந்து கிடக்கும் ஏகாதிபத்திய முகாமுக்கும், சோசலிச முகாமுக்குமிடையேயுள்ள முரண்பாடுகளைப் பயன்படுத்திக் கொண்டு, நாட்டில் தன்னுடைய வர்க்க ஆட்சியைப் பலப்படுத்திக் கொள்ளுகிறது. இது ஒரு அம்சம்

இரண்டாவதாக, இந்திய முதலாளித்துவ - நிலப்பிரபுத்துவ அரசாங்கமானது, ஏகாதிபத்திய நெருக்குதலைத் தாக்குப் பிடித்துச் சமாளிக்கவும்-அன்னிய முதலாளிகளிடம் அதிக அனுகூலமான பேரம் நடத்தவும் — உலக முதலாளித்துவ அமைப்பே இடிந்து நொறுங்கி அழுகிக் கொண்டிருக்கும் சகாப்தத்தில், இந்த நாட்டில் முதலாளித்துவத்தை நிர்மாணிக்கவும் - சோவியத் உதவியை மிகவும் சாமர்த்தியமாகப் பயன்படுத்தி வருகிறது.

மூன்றாவது அம்சம் என்னவென்றால் ஏழை எளிய மக்களை இஷ்டம் போல சுரண்டிக் கொழுக்க, ஏகபோக முதலாளிகளுக்கும் நிலப்பிரபுக்களுக்கும் வாய்ப்பு வசதிகளை அளிக்கக்கூடிய ஒரு அரசாங்கம் இங்கு இருக்கிறது.

நடைமுறையில் இப்படிச் செய்து கொண்டிருக்கின்ற அதே சமயத்தில், தீவிர நிலச் சீர்திருத்தம் கொண்டு வரப் போவதாகவும், சமத்துவ சமுதாயத்தை அமைக்க போவதாகவும், சமுதாயத்தை சோசலிசமயமாக்கிக் கொண்டிருப்பதாகவும் வாய்ச் சவடால் அடித்து மக்களை ஏமாற்றிக் கொண்டிருக்கின்ற ஒரு சர்க்கார் இங்கு இருக்கிறது.

கடைசியாக:

நல்வாழ்வு கோரிப் போராடிக் கொண்டிருக்கும் தொழிலாளர்களையும், விவசாயிகளையும், நடுத்தர வர்க்கங்களையும் அடித்து நசுக்குவதற்காக என்றே ஒரு கோரமான போலீஸ் படையையும் அமைத்துக் கொண்டிருக்கின்ற ஒரு சர்க்கார் இங்கு இருக்கிறது.

பிரஷ்நேவ் போன்ற சோவியத் கம்யூனிஸ்ட், தலைவர்களுக்கு சிறப்புமிகு வரவேற்பு அளிக்கும் இந்திய சர்க்கார்தான், சுரண்டப்பட்ட தொழிலாளி, விவசாயிகளின் லட்சியங்களுக்காகப் போராடிக் கொண்டிருக்கும் இந்தியக் கம்யூனிஸ்டுகளை, துப்பாக்கிச் சனியன்களாலும் துப்பாக்கிக் குண்டுகளாலும் வரவேற்கிறது.

இப்படிப்பட்டநிலைமை இங்குஇருக்கும் போது — இரு நாடுகளின் அரசுகளும் அரசாங்க மட்டத்தில் பேசிவருவதை — அதாவது இந்திய அரசாங்கத்தைப் பற்றி சோவியத் அரசாங்கம் பேசி வருவதை— இந்தியாவிலுள்ள கம்யூனிஸ்டு கட்சி அப்படியே காப்பியடிக்க முடியுமா? முடியாது.

ஆனால், அந்த எதிரொலிக்கும் வேலையைத்தான் வலதுகம்யூனிஸ்டு தலைவர்கள் செய்து கொண்டிருக்கிறார்கள். இந்த வேலையை செய்யாததற்காக, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை சோவியத் எதிர்ப்புக் கட்சியென்றும், இந்தியாவுக்கும்சோவியத் யூனியனுக்குமிடையே ஏற்பட்டுள்ள வர்த்தக, ஒத்துழைப்பு உறவுகள் வளர்வதை எதிர்க்கும்படியான கட்சியென்றும் வலது கம்யூனிஸ்டு தலைவர்கள் அவதூறு பொழிகிறார்கள். இது ஒருபுறமிருக்கட்டும்.

### மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தெளிவான நிலை

வலது கம்யூனிஸ்டு தலைவர்களின் பேச்சுகளும், ஏச்சுகளும் இவ்வாறு இருக்கையில் - மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைப் பற்றி, இப்பிரச்சனையில் இடதுசாரி விமர்சகர்கள் என்ன சொல்கிறார்கள் என்று பார்ப்போம்.

அவர்கள், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கொஞ்சம் கொஞ்சமாய் "சோவியத் ஆதரவு" நிலையை மேற்கொண்டு வருவதாகக் குறை கூறுகிறார்கள்.

இவ்விரு சாரரும் நமது நிலையைத் திரித்துக் கூறுகிறார்கள். சோவியத்யூனியனைப்பற்றியும், மக்கள் சீனத்தைப் பற்றியும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கொண்டுள்ள அடிப்படையான நிலை என்ன? என்பதைப் பற்றியோ, அல்லது சில அடிப்படையான தத்துவார்த்த அரசியல் பிரச்சினைகள் குறித்து சோவியத் கட்சியைப் பற்றியும், சீனக் கட்சியைப் பற்றியும் விமர்சிக்கும் போது அவற்றின் வலது சந்தர்ப்பவாத திரிபு, இடது சந்தர்ப்பவாத திரிபு ஆகியவை பற்றி நாம் குறிப்பிட்டுள்ளோம். நம்மை கண்டிப்பவர்கள் நமது நிலையைச் சரிவர எடுத்துச் சொல்லி கண்டிக்கவில்லை. நமது நிலை என்ன?

### சோவியத் கட்சிக்கோ சீனக் கட்சிக்கோ நாம் எதிர்ப்பு அல்ல

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியானது தீர்மானமாக சோவியத் யூனியனுக்கு ஆதரவான கட்சி; மக்கள் சீனுவுக்கும் ஆதரவானகட்சி. காரணம் இந்த இரண்டு நாடுகளுமே உலக சோசலிஸ்ட் அமைப்பின் ஆகப் பெரிய சோசலிஸ்ட் அரசுகளாகும்.

வலது கம்யூனிஸ்ட் கட்சிதான் சோவியத் ஆதரவுக் கட்சி என்ற போர்வையில் சீனஎதிர்ப்புக் கட்சியாக தன்னை ஆக்கிக் கொண்டிருக்கிறது.

அதே போல அதி தீவிரவாதிகளான நக்ஸலைட்டுகள், மாவோ சிந்தனைக்கும் மக்கள் சீனத்துக்கும் விசுவாசிகள் என்ற போர்வையில், தங்களை சோவியத் எதிர்ப்புச் சக்திகளாக ஆக்கிக்கொண்டிருக்கிறார்கள்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியோ, இந்த இடது சந்தர்ப்பவாத நிலையையும் மேற்கொள்ளாமல்— அதேபோல வலது சந்தர்ப்பவாத நிலையையும் மேற்கொள்ளாமல்— இந்தத் திரிபுகளினின்றும் தன்னை வேறுபடுத்தி, எப்போதுமே தனது தனிக் கொள்கையை உயர்த்திப் பிடித்து வந்திருக்கிறது.

எங்களுடைய சோவியத் ஆதரவையும், எங்களுடைய சீன ஆதரவையும் நாங்கள் இரகசியமாகவைத்துக்கொள்ளவில்லை. மார்க்சிஸ—லெனினிஸ லட்சியத்திற்கு அடிப்படையான விசுவாசத்தைக் காட்டக்கூடிய ஆதரவு அது. சோசலிஸ, கம்யூனிஸ லட்சியத்துக்கும் அடிப்படையான விசுவாசம் செலுத்தக் கூடிய ஆதரவாகும் அது.

### தவறே செய்யாத கட்சி உண்டா?

நாங்கள் சோஷலிசத்துக்கும், சோஷலிஸ்ட் உற்பத்தி வினியோக உறவுகளுக்கும் ஆதரவு கொடுப்பதினாலே இதர கட்சிகளின் சில பல கொள்கைகளினின்றும் வேறுபடக்கூடாது என்று ஒன்றுமில்லை. இந்தக்கட்சிகள் சில கொள்கைகளில் வலது திருத்தல் வாதத்தையோ அல்லது இடது சந்தர்ப்பவாதத்தையோ மேற்கொண்டிருப்பதாக நாங்கள் காண்போமேயானால். மார்க்சிஸ்ட்—லெனினிஸ்ட் கட்சி என்ற முறையில், எங்கள் கட்சியானது அக்கட்சிகளிடமிருந்து வேறுபடத்தான் செய்யும்; வேறுபடுவதை எதுவும் தடுத்திடவும் முடியாது.

ஒரு கேள்வி கேட்கிறோம். சோவியத் யூனியனில் ஆளும் கட்சியான கம்யூனிஸ்ட் கட்சியோ அல்லது சீனவில் ஆளும் கட்சியான கம்யூனிஸ்ட்கட்சியோ இடது சந்தர்ப்பவாதத்தவறையோ வலது சந்தர்ப்பவாதத் தவறையோ ஒருபோதும் செய்ததில்லைஎன்று மார்க்சியத்தில் வெள்ளிடை மலையாக உள்ளதா என்று கேட்கிறோம்.

தவறே செய்யாத கட்சிகள் என்று அடித்துரைக்கப்பட்ட வாதமெல்லாம், கடந்த 50 ஆண்டுகளுக்கு மேலான வரலாற்றில் அடிபட்டு விட்டது என்பது நமக்குத் தெரியாதா?

### எந்த வர்க்கம் பக்கம்?

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியானது 1972-ம் ஆண்டு ஜூலை மாதத்தில் கூடிய 9-வது கட்சிக் காங்கிரசில் நிறைவேற்றிய அரசியல் தீர்மானத்தில் என்ன கூறுகிறது என்பதைப் பார்ப்போம் அதில்:

"சோவியத் யூனியனும் சீனுவும். ஒரு உண்மையைப் புறக்கணிக்கின்றன. அதாவது முன்னாள் காலனி நாடுகளில் சுதந்திரமடைந்த பிறகு ஆளும் உயர் வர்க்கங்களுக்கும் சாதாரண மக்களுக்குமிடையே சமுதாய முரண்பாடுகள் வளர்ந்துள்ளன என்ற உண்மையை சோவியத் யூனியனும் சீனுவும்புறக்கணிக்கின்றன. சுரண்டப்பட்ட மக்களின் வளர்ந்துவரும் ஜனநாயக இயக்கத்தின் பக்கம் நின்று அவர்களுக்கு ஊக்கமூட்டுவதற்குப் பதிலாக சாராம்சத்தில் சுரண்டும் வர்க்கங்களால் நடத்தப்படும் 'அரசாங்கங்களையே அவர்கள் சார்ந்து நின்று ஆதரவு கொடுக்கிறார்கள்"— என்று சுட்டிக் காட்டப்பட்டிருக்கிறது.

மேலும் அது கூறுவதாவது:—

"அவர்களது அன்னிய நாட்டுக் கொள்கைகளின் குறுகிய காலத்தேவைகளை அடையும் முயற்சியில், அவர்கள் இந்த நாடுகளிலுள்ள கம்யூனிஸ்டு, தொழிலாளர் கட்சிகளின் மீது சில தவறான கொள்கைகளை திணிக்க முற்படுகின்றார்கள். இந்தத் தவறான கொள்கைகள் அககட்சிகளைக் கலைப்பதில் கொண்டு போய் விடுகின்றன. ஆளும் ஆட்சியால்சிருஷ்டிக்கப்படும்கட்சிகளில் இணைந்துமறைந்து விடுவதிலோ அல்லது அவைகளுக்கு யதார்த்தத்தில் பணிவான எடுபிடிகளாக ஆக்கி விடுவதிலோ கொண்டு போய் விடுகின்றன" என்று குறிப்பிட்டுள்ளது.

### வாய் மூடிக் கிடக்கிறார்கள்

அதே தீர்மானத்தில் தொடர்ந்து விளக்குகையில்:-

"சோவியத் யூனியன், சீன ஆகிய இருவருமே, இந்த நாடுகளின் ஏகாதிபத்திய எதிர்ப்பு பாத்திரம் பற்றி ஏறுக்குமாறாக மெச்சிப் புகழ்கின்றன. அதே சமயம், இந்த நாடுகள் உள்நாட்டில் ஜனநாயக விரோத நடைமுறைகளையும் கம்யூனிஸ்டு எதிர்ப்பு நடவடிக்கைகளையும் மேற்கொள்ளுவதைப்பற்றி முழுக்க முழுக்க அலட்சியம் செய்துவிடுகிறார்கள் அல்லது மூடி மறைத்து விடுகிறார்கள். ஆப்பிரிக்காவிலும் மேற்கு ஆசியாவிலும் உள்ள இந்த நாடுகளில் தொடர்ந்து பலவற்றில், ஆளும் வர்க்கங்கள் பகிரங்கமாகவும், ஒளிவு மறைவின்றியும் உள்நாட்டில் கம்யூனிஸ எதிர்ப்புக் கொள்கையைக் கடைப்பிடிக்கிறார்கள்.

"கம்யூனிஸ்ட்டுகளின் மீது பயங்கர அடக்குமுறையைக் கட்டவிழ்த்து விட்டுள்ளார்கள். கம்யூனிஸ்ட், தொழிலாளர் கட்சிகளை சட்ட விரோதமாக்கியுள்ளார்கள். பல சந்தர்ப்பங்களில் சம்பந்தப்பட்ட ஆளும் ஆட்சிகளால் ஆதரிக்கப்படும் கூட்டணிக் கட்சிகள் என்று கூறப்படுபவைகளுடன் இணைந்து கொள்ள நிர்ப்பந்திக்கப்பட்டுள்ளனர். முற்போக்காளர் என்று சொல்லிக் கொள்ளும் தேசிய முதலாளிகளும், குட்டி பூர்ஷ்வா வர்க்கங்கள் அல்லது வகுப்புகளாலும் தலைமை தாங்கப்படும் நாடுகளும், அரசாங்கங்களும் என்று கருதப்படும் இவற்றில்-பற்பல அரசாங்கங்கள் தொழிலாளர் தலைவர்களையும் விவசாயிகள் தலைவர்களையும் மிருகத்தனமாக நசுக்குகிறார்கள்; சிறையில் தள்ளுகிறார்கள் கொன்று குவிக்கிறார்கள். இந்த அடக்குமுறைகள் பற்றியோ ஒடுக்குமுறைகள் பற்றியோ, கொடூரங்கள் பற்றியோ, சோவியத் யூனியன் பத்திரிகைகளிலோ, சீனப் பத்திரிகைகளிலோ ஒரு வார்த்தை கூட வெளிவருவது இல்லை. எகிப்து, சிரியா, ஈராக், சூடான், அல்ஜிரியா, பர்மா, கானு, இந்தோனேஷியா, இந்தியா, இலங்கை, பாகிஸ்தான், மற்றும் இதர பல நாடுகளும் கண்கண்ட உதாரணங்களாகத திகழ்கின்றன"

(9வது காங்கிரஸ்அரசியல் தீர்மானம் செக்ஷன் 30-31)

[தொடரும்]

---

கூலி உயர்வு கோரி

## சேலம் நெசவாளர் - சாயத் தொழிலாளர் போராட்டம்

சேலம், டிச. 26—

சேலம் நகரில் உள்ள பெட்ஷீட் நெசவு தொழிலாளர்களும், சாயத்தொழிலாளர்களும் கடந்த நவம்பர் 24-ந் தேதி முதல் கூலி உயர்வு கோரி போராடி வருகிறார்கள்.

சி ஐ டி யூ சங்கம் இந்த போராட்டத்தை முன்னின்று நடத்துகிறது. பெட்ஷீட் நெசவாளர் சர்வகட்சியும் அமைக்கப்பட்டுள்ளது.

ஆயிரத்துக்கு மேற்பட்டவர்கள் போராட்டத்தில் கலந்துள்ளனர். 30-ந் தேதி லேபர் ஆபீசர் முன் பேச்சுவார்த்தைக்கான ஏற்பாடு செய்து இருந்தும் முதலாளி சங்கத்தைச் சார்ந்தவர்கள் பேச்சுவார்த்தைக்கு வரவில்லை.

6—12—73-ந்தேதி தாதகாப்பட்டி டோல் கேட் அருகில் உள்ள காய்கறி மார்க்கெட் திடலிலிருந்து ஆ.அர்த்தனரி, பி.கந்தசாமி ஆகியோர் தலைமையில் கண்டன ஊர்வலம் நடைபெற்றது. ஐநூறுக்கு மேற்பட்ட தொழிலாளர்கள் கோரிக்கைகளை முழங்கிக் கொண்டு கலெக்டரை சந்தித்து கோரிக்கை அடங்கிய விண்ணப்பத்தை கொடுத்தனர்.

10—12—73-ந் தேதி இரவு முதலாளிகள் சங்கம் பேச்சுவார்த்தை நடத்த இணங்கியது.

ஆனல், பேச்சுவார்த்தை உடன்பாடு ஏற்படவில்லை முதலாளிகளின் பிடிவாத போக்கைகண்டிக்கு முறையில் பேக்டரி முன் ஆர்ப்பாட்டம் செய்து மாபெரும் ஊர்வலமாக சேலம் நகர் முக்கிய வீதிகள் வழியாக கோரிக்கைகளை முழங்கி கருங்கள்பட்டி:குகைலையன் மோடு, சண்முகநகர், பாரதி நகர் காட்டூர், சீலநாய்க்கன் பட்டி, ராமையன்காடு, பெருமாள் கோவில் வழியாகடோல்கேட் வந்தடைந்தது.

கூட்டத்தில் சி ஐ டி யூ சங்க செயலாளர் பி.கந்தசாமி சர்வ கட்சி கமிட்டி செயலாளர் எல்.ஏ.மாணிக்கம், கமிட்டி தலைவர் ஆ. அர்த்தனரி ஆகியோர்பேசினர்.

அடுத்த கட்டமாகமறியல் போராட்டம் நடத்த முடிவு செய்யப்பட்டது. இதன் பேரில் முதலாளிகள் சங்கம் வழிக்கு வந்தது. பேச்சுவார்த்தை நடத்தி உடன்பாடு செய்ய முன்வந்தது.

### வலது சங்க துரோகம்

12—12—73-ந் தேதி முதலாளிகள் சங்கத்தின் சார்பில் நோட்டீஸ் வெளியிட்டு தொழிலாளர்களை குழப்ப முயன்றது.

இதை பயன்படுத்தி முதலாளிகள்: ஒப்பந்தம் செய்ய மறுத்து சண்டித்தனம்செய்வதை கண்டிக்கும் முறையில் 15—12—73-ந் தேதி மாலை 5 மணிக்கு டோல் கேட்டிலிருந்து மாபெரும் ஊர்வலம் நடைபெற்றது. புலக்கடை மைதானத்தில் பொதுக்கூட்டமும் நடைபெற்றது.

பொதுக்கூட்டத்திற்கு சர்வகட்சி கமிட்டி தலைவர் ஆ.அர்த்தனரிதலைமைவகித்தார். கூட்டத்தில் சேலம் பாவட்ட சாயம் ஜமக்காளம் பெட்ஷீட் லேபர் யூனியன் செயலாளர் பி. கந்தசாமி சர்வக்கட்சி தோழர்கள் எல். ஏ. மாணிக்கம் மார்க்சிஸ்ட் தோழர்கள் பி.பழனி, ஆர். ராஜசண்முகம் ஆகியோர் பேசினார்கள்.

---

## சவாண் அலறல்

போபால், டிச; 23—

தற்போதுபெட்ரோலுக்கு உள்ள நெருக்கடியினல் இந்தியப் பொருளாதாரம் பாதிக்கப்படும் — என்று மத்திய நிதி அமைச்சர் சவாண் கூறினர். 'ஆயினும் பிரதமர் இந்திராகாந்தியின் தலைமையில் அரசு இந்த நெருக்கடியைச் சமாளித்து விடும் என்று அவர் வீருப்புப் பேசினர். இந்த நெருக்கடி குறித்து பொதுமக்களுக்கு பிரச்சாரம் செய்யுமாறும் சவாண் தனது கட்சிக்காரர்களை கேட்டுக்கொண்டார்,

போபாலில், சென்ற 25ம் தேதியன்று பேசுகையிலேயே சவாண் அவ்வாறு கூறினர்.

---

எண்ணெய் நெருக்கடியால்

## பாதிப்பு

புதுடெல்லி. டிச. 28—

புதுடெல்லியில் 26-ம்தேதியன்று நடந்த ஒருபத்திரிகையின் 32-வது ஆண்டுவிழாவைத் துவக்கி வைத்துப் பேசிய சவாண், தற்போது ஏற்பட்டுள்ள எண்ணெய் நெருக்கடியானது அந்நியச் செலாவணி இருப்பைப் பெரிதும்பாதிக்கும் என்றார்.

---

பங்களாதேசில் பஞ்சாயத்துயூனியன்

## தேர்தல்கள் ஒத்திவைப்பு

டாக்கா, டிச. 22—

பங்களாதேசத்தில் 450 பஞ்சாயத்து யூனியன்களுக்கு நடக்கவிருந்த தேர்தல் தொடர்ச்சியான வன்முறை நிகழ்ச்சிகள் பலவற்றினல் ஒத்தி வைக்கப்பட்டுவிட்டது.

வேட்பாளர்கள் சிலர் உள்பட 70பேர்வன்முறைச் சம்பவங்களில் கொல்லப்பட்டதாகக்கூறப்படுகிறது. போலீஸ் அதிகாரிகள் தேர்தல் அதிகாரிகள்கூட காயமடைந்தனர்.

வன்முறைச் சம்பவங்கள் நேராது தடுக்க ராணுவம் அழைக்கப்பட்டுள்ளது.

---

பெட்ரோலிய எண்ணை விலை

## 134 சதம் உயரும்

ஈராக் அறிவிப்பு

பாப்தாத். டிச: 28—

1974 ஜனவரி 1-ம் தேதி முதல், தனது கச்சா பெட்ரோலிய எண்ணெய்யின் (குரூட் ஆயிலின்) விலையை நூற்று முப்பத்துநான்கு சத விகிதம் உயர்த்துவதென ஈராக் அரசு முடிவு செய்துள்ளது.

கடந்த வாரம் டெஹ்ரானில் பாரசீக வளைகுடாவை சேர்ந்த அபுதாபி, ஈரான், ஈராக், குவைத், கட்டார், சவூதிஅரேபியா, — ஆகிய 6 நாடுகள் செய்த முடிவுக்கிணங்க, இந்த விலைஉயர்வு அறிவிக்கப்படுவதாக, ஈராக் அரசு கூறியுள்ளது.

தென் ஈராக்கிலிருந்து வரும் "35—அடர்த்தி" ரக கச்சா எணணெய்யின்விலை இம் மாதம் ஒரு பீப்பாய்க்கு 4.978 டாலராக இருப்பது, 11.761 டாலராக உயர்த்தப் படும்.

---

## கோவை தேர்தல்...

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

சார்பில் ரூ. 200ம், ஆக மொத்தம் ரூ 412ம் அளிக்கப்பட்டது.

இதுதவிர மேலும் பொது மக்களிடம் நிதி வசூலிப்பது என்றும், தேர்தலுக்கு ஒரு மைக் செட்டு, ஒரு மாத காலத்திற்கு அனுப்பிவைப்பதென்றும், முடிவு செய்யப்பட்டது.

தேர்தலையொட்டி, தோழர்கள் சி எஸ் பொன்னுச்சாமியும், டி கே பழனிச்சாமியும், தேர்தலை யொட்டி ஒரு மாத காலமும், மற்றும் பல தோழர்கள் 15 தினங்களும் முழுமையாகதேர்தல் பணிகளில் ஈடுபடுவது என்றும் தீர்மானிக்கப்பட்டது.

---

# வேலையில்லாத்திண்டாட்டத்தை எதிர்த்துப் போராட்டம்

## 5 அம்சக் கோரிக்கைகள் மீது

சென்னை, டிச. 24—

வேலையில்லா திண்டாட்டத்தை எதிர்த்து போராட 8 அம்சக் கோரிக்கைகளை சென்னையில் கூடிய சி ஐ டி யூ தமிழ் மாநில மாநாடு முன்வைத்துள்ளது. அம் மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம் வருமாறு:-

நாட்டில் தொழிலாளர் படித்த மத்தியதர சிப்பந்திகள், கிராம ஏழை விவசாயிகள், ஆகியவர்கள் மையத்தில் வேலையில்லாத திண்டாட்டம் தொடர்ந்து அதிகரித்து வருகின்ற நிலைமை மிகக் கவலைக்கிடமாக இருப்பதை சி ஐ டி யூ மகாநாடு ஆழ்ந்த கவலையுடன் பார்க்கிறது.

அரசாங்க புள்ளி விவரப்படி பதிவு செய்யப்பட்ட வேலையில்லாதவர்கள் எண்ணிக்கை என்பது 81 லட்சமாக உயர்ந்துள்ளது. இதில் 25 சதத்திற்கு மேல் படித்த வேலையற்ற இளைஞர்கள் ஆவார்கள். கிராமப் பகுதிகளில் வேலையற்று தவிப்பவர்கள் எண்ணிக்கை 3 கோடியாக அதிகரித்துள்ளது. இந்த நிலை நீடிக்குமா ஒரு கணக்குப்படி இது 1980-ல் 7 கோடி வேலையற்றவர்களாக அதிகரிக்கக் கூடும் என்று மதிப்பிடப்படுகிறது.

### முதலாளித்துவதற்கு சாவுமணி

வேலையில்லாத் திண்டாட்டத்திற்கு மூல காரணம், காங்கிரஸ் ஆட்சியின் முதலாளித்துவ திட்டங்களும், நிலபிரபித்துவ ஆதிக்கத்தின் தன்மையும், இந்திய அந்நிய பெரு முதலாளிகளின் சூறையாடலும் ஆகும். என்று இம்மாநாடு சுட்டிக்காட்டவிரும்புகிறது. முதலாளித்துவ அமைப்பில் வேலையில்லா திண்டாட்டம் என்பது தவிர்க்க முடியாததாகும் என்பது சர்வதேச தொழிலாளி வர்க்கத்தின் படிப்பினையாகும்; வேலையில்லாத் திண்டாட்டத்திற்கு சாவு மணியடிப்பதென்பது முதலாளித்துவத்திற்கு சாவுமணியடிப்பதின் மூலமும் சோசலிஷ அமைப்பு ஸ்தாபிதம் செய்வதின் மூலமுமே சாத்திய மாகும்.

வேலையில்லாத் திண்டாட்டத்தை நீக்கப் போவதாகவும், அதைக்குறைப்பதற்கு சில நடவடிக்கைகளை மேற்கொள்வதாகவும் மத்திய அரசு கூறிக்கொள்கிறது. அதே சமயத்தில் ஏற்கனவே வேலை செய்து வரும் பாட்டாளி மக்களை வேலை நீக்கம் செய்ய முதலாளிகளுக்கு பச்சைக் கொடிகாட்டி அனுமதிக்கிறது. நவீனஇயந்திரமயமாக்குதல் என்ற பெயராலும். அது மின் இயந்திரங்களைப் புகுத்துவதின் மூலமும் மேலும் வேலை வாய்ப்பை இழக்க வழி செய்கிறது. விவசாயத்தில் டிராக்டர்களை புகுத்துவதின் மூலம் மேலும் விவசாயக் கூலிகள் நடுத்தெருவில் வேலையற்றவர்களாக நிறுத்தப்படுகிறார்கள்.

மத்திய அரசு 5-வது ஐந்தாண்டு திட்டத்தில் வேலையில்லாத் திண்டாட்டத்தை குறைப்போம் என்பதும் வேலையற்றவர்களுக்கு நிவாரணம் என்பதும் கண் துடைப்பே தவிர அடிப்படை பிரச்சினைக்கு தீர்வாக அமைய முடியாது.

இந்த மாநாடு கீழ்க்கண்டவற்றை வலியுறுத்த விரும்புகிறது.

(1) இந்திய அரசியல் சட்டத்தில் வேலை கிடைக்க உத்திரவாதம் அளிக்கும் உரிமை இடம் பெற வேண்டும்.

(2) எல்லா வேலையற்றவர்களுக்கும், அரைகுறை வேலையுள்ளவர்களுக்கும் கட்டாயமாக வேலை தேடி தரும் ஸ்தாபனத்தில் பதிவு செய்ய வகை செய்யவேண்டுல்.

(3) சீனியாரிடி அடிப்படையில் வேலை தேடி தரும் நிலையங்கள் மூலமே தேவையான ஆட்கள் எடுக்கப்பட வேண்டும்.

(4) நகர்ப் புறங்களிலும், கிராமப் புறங்களிலும் வேலையற்றிருக்கும் சகலருக்கும் நிவாரணம் அளிக்கும் பொறுப்பை அரசு ஏற்க வேண்டும்,

(5 விவசாயிகள் நிலத்திலிருந்து வெளியேற்றப் படுவதை தடை செய்ய வேண்டும்,

(6)சிறு தொழில்களுக்கும், குடிசைத்தொழில்களுக்கும் கடன் உதவி அளித்தல், கிராமப்புற புனர்நிர்மான வேலைகளை விஸ்தரிப்பது, ஆரம்ப உயர்தரக் கல்விகளுக்கு கட்டாய இலவச உதவி ஆகியவைகளை அரசு வழங்க வேண்டும்,

(7) வேலைநீக்கம் செய்வது லே ஆப், கதவடைப்பு, தொழிலை மூடுதல், அணு இயந்திரம் புகுத்தல், போன்ற தொழிலாளர்களின் எண்ணிக்கையை குறைக்கும் போக்குகளைத் தடை செய்ய வேண்டும்.

(8) எல்லா தொழில் நிறுவனங்களிலும், முழு அளவு உற்பத்தித் திறனை பயன்படுத்த வேண்டும்.

டிச. 31-ல் திருச்சியில்

# அனைத்து மாணவர் அமைப்பு தலைவர்கள் கூடுகிறார்கள்

## எதிர்காலப் போராட்டம் குறித்து முடிவு எடுக்கப்படும்

சென்னை, டிச, 27— மாணவர்களது எதிர்கால போராட்ட திட்டங்கள் குறித்துவிவாதித்துமுடிவெடுக்க வருகிற 31-ந்தேதியன்று திருச்சியில் மாணவர் தலைவர்கள் கூடுகிறார்கள்.

இது குறித்து இந்திய மாணவர் சங்கத்தைச் சேர்ந்த கே. சந்துரு, அ. தி. மு. க. சார்பில் அழகு திருநாவுக்கரசு தமிழ்நாடுதேசிய மாணவர் சங்கம் சார்பில் இரா. ஜெயச்சந்திரன், கே. குப்புச்சாமி அனைத்திந்திய மாணவர் பெருமன்றம் சார்பில் ஜான் செல்வராஜ் ஆகியோர் கூட்டாக விடுத்துள்ள அறிக்கை வருமாறு:

“பாளையங்கோட்டை கிளைவ் விடுதி வன்முறைச் சம்பவங்களுக்கு காரணமான காவல்துறையை வைத்திருக்கும் கருணாநிதி பதவி இறங்கும் வரை நாடு முழுவதும் நடைபெறும் மாணவர் போராட்டத்தினை முறைப்படுத்திடவும் - தீவிரபடுத்திடவும் இத்திங்கள் 31ந் தேதிக்குள் பதவி இறங்காவிட்டால் தமிழ்நாடு முழுவதும் கறுப்புக் கொடி ஆர்ப்பாட்டங்கள் நடத்திடவும்—அனைத்துக் கட்சி மாணவப் பிரதிநிதிகள் முடிவு எடுத்துள்ளனர்.

எனவே வரும் 31ந் தேதி காலை 10-30மணிக்குதிருச்சியில் தமிழகத்திலுள்ள அனைத்துக் கல்வி நிலையங்களின் மாணவர் தலைவர்களும் செயலாளர்களும் கூடி ஆலோசிப்பதென முடிவெடுத்துள்ளோம்.

எனவே, தமிழகம் முழுவதும் உள்ள மாணவத் தலைவர்கள் 31-ம் தேதி காலை திருச்சி நகருக்கு வருகை தருமாறு வேண்டுகிறோம். எதிர்கால போராட்டத் திட்டங்களையும், கைது செய்யப்பட்டு காவலிலும் ஜாமீனிலும் உள்ள மாணவத் தளபதிகளை விடுவிக்கும் வழிவகைகளையும், கல்வி நிலையங்களில் நடவடிக்கை எடுக்கப்பட்டு வெளியேற்றப்பட்டுள்ள மாணவர்களைத் திரும்பவும் கல்வி நிலையங்களில் சேர்ப்பதற்குரிய ஏற்பாடுகளையும் இவற்றிற்கான ஆலோசனைகளையும் ஆராய்வதற்கு நடைபெறும் இந்தக் கூட்டத்தில், தமிழகம் முழுவதும் உள்ள கல்வி நிலையங்களின் மாணவர் தலைவர்கள்; நம்முடைய உடன் பிறப்புக்களின் குருதி குடித்த வஞ்சக ஆட்சியை வீழ்த்திடும் அவசர அவசிய உணர்வோடு கலந்துகொள்ளுமாறு வேண்டுகிறோம்.” —இவ்வாறு அந்தஅறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## சுதந்திரமான...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

எண்ணிக்கை லட்சத்தைத் தாண்டி விட்டது.

### வேலையின்மை தீரவழி

வெறும் 5 சதவீத ஏகபோக நிலப்பிரபுக்களின் கைகளில் அகப்பட்டுள்ளது இந்தியாவின் 50 சதவீத நிலம். இந்த நிலம் விநியோகிக்கப்பட்டிருந்தால் 50 சதவீதம் விவசாயிகளுடையவும், விவசாயத் தொழிலாளர்களுடையவும் வேலையின்மை தீர்க்கப்பட்டிருக்கும். நாட்டின் இன்றையநிலைமைக்கு ஓரளவு மாற்றம் ஏற்பட்டிருக்கும். ஆனால் ஏகபோகங்களுக்காக ஆட்சி நடத்துபவர்கள் அதை செய்வார்கள் என்று நம்மால் எதிர் பார்க்க முடியாது.

இந்த நிலைமையில், இன்றைய ரண்டல் அமைப்பைப் பாதுகாக்கும் இந்திரா காந்தியின் அரசுக்கு பிரஷ்னேவ் ‘சர்டிபிக்கேட்’ கொடுக்கும் போது நாம் மால் அதை அங்கீகரிக்க முடியுமா? முடியாது.

சீன கம்யூனிஸ்ட் கட்சிக்கு—நாம உடனடியாக ஆயுதப் புரட்சியில் இறங்காதது பற்றித்தான் ஆத்திரம். நான் ஒன்று கேட்கிறேன். சீனாவில் ஆயுதப் புரட்சி நடந்தது வெளிநாட்டார்கள் யாரேனும் நிர்ப்பந்தப் படுத்தித்தானா?

சோவியத் யூனியனிலும் அப்படித்தான் நடத்தப்பட்டதா? இல்லை. சந்தர்ப்பம் சரியானபோது அந்தந்த நாட்டு மக்கள் அதற்குரிய முடிவை மேற்கொண்டனர்.

இந்த நாட்டு ஜனநாயக அமைப்பின் ஒரு பகுதியாக ஓட்டுச் சீட்டுஉபயோகித்து சரியான முறையில் தேர்தல் உரிமையை அனுமதிக்காத போது ஓட்டுச் சீட்டு இல்லையென்றால் துப்பாக்கி குண்டு என்று சொல்லி களத்தில் குதிக்க முடியுமா? தெலுங்கானா தந்த அனுபங்கள் நம்மிடம இருக்கிறதே.

### மக்கள் முடிவெடுக்க வேண்டும்

இந்திய நாட்டு மக்கள் தான் எப்பொழுது ஆயுதமெடுப்பது என்பது பற்றிய முடிவை மேற்கொள்ள வேண்டியவர்கள். இன்னொரு நாட்டிலிருந்து கிடைத்த உத்தரவுப் படி ஒரு நாட்டில் புரட்சி நடந்த வரலாறில்லை. எனவே சீனக் கம்யூனிஸ்ட் கட்சி மீது நாம் மதிப்பு கொண்டிருப்பினும் அவர்கள் சொல்லும் இந்தக் கருத்தை ஏற்றுக் கொள்ள முடியாது.

### கருத்து வேறுபாடு

இங்கு ஒரு திரிபுவாத கம்யூனிஸ்ட் கட்சி இருக்கிறது --‘இந்திராகம்யூனிஸ்ட்கட்சி’ ஏன் கம்யூனிஸ்ட் கட்சியின் பிளவு என்று கேட்டவர்கள் உண்டு. நிலப்பிரபுத்துவத்தையும், ஏகபோக முதலாளித்துவத்தையும் ஏகாதிபத்தியத்தையும் ஆதரிக்க வேண்டுமா, வளரவிட வேண்டுமா என்ற பிரச்சினையில் தான் கருத்து வேறுபாடு ஏற்பட்டது.

வலது கம்யூனிஸ்டுகள் யாருக்காகச் செயல்படுகின்றனர் என்பதைக் கேரள மக்கள் புரிந்து கொண்டார்கள் அல்லவா? இங்கு காவல் நிலையங்களில் கற்பழிப்புகளும் வேலை நிறுத்தம் செய்யுமிடங்களில் அடக்கு முறையும் தானே நடக்கிறது? இங்கு வேலை இல்லாத் திண்டாட்டம் தீர்க்கப்பட்டதா? மக்கள் பட்டினி தானே கிடக்கின்றனர்?

மக்கள் மார்க்சிசம்—லெனினிசத்தின் அடிப்படையில் உறுதியாகச் செயல்பட்டு இந்திய நாட்டிலுள்ள பெரும்பான்மையினரான ஏழைகளின்விடுதலைக்காக நடக்கும் போராட்டத்திற்கு ஆக்கமும் ஊக்கமும் அளிக்க வேண்டும்.

இவ்வாறு தோழர் பசவபுன்னையா பேசினார்.

பொதுக் கூட்டத்திற்கு தோழர் எம். கே. கிருஷ்ணன் எம். பி. தலைமை வகித்தார்.

தமிழ் நாடு விவசாயிகள் சங்க துணைச் செயலாளர் தோழர் ஜி. வீரய்யனும் பேசினார்.

வட மாநிலங்களில்

## குளிருக்கு 200 பேர் பலி

### பீகாரில் மட்டும் 131 பேர்

புதுடெல்லி.டிச 27— இந்தியாவின் வட மாநிலங்களில் கடந்த இருவாரங்களாக உள்ள கடுங் குளிருக்கு 200க்கு மேற்பட்ட ஏழைமக்களும் வீடற்றோரும் பலியாகியுள்ளனர். பீகாரிலும், உ. பி. யிலும் இறந்தவர்களின் எண்ணிக்கை அதிகம்.

குளிரினால் செத்து மடியும் உயிர்களின் எண்ணிக்கை மேலும் மேலும் அதிகரித்துவருகின்றபோதிலும் அவர்களுக்கு தேவையான உதவிகளும், பாதுகாப்புகளும் அளிக்கவோ நிவாரண நடவடிக்கைகள் மேற்கொள்ளவோ அம் மாநிலங்களில் உள்ள காங்கிரஸ் அரசுகள் முன் வந்ததாகத் தெரியவில்லை.

கடந்த 25-ந் தேதியன்று பீகார் மாநிலத்தில் கடுமையான குளிர் காற்று வீசியது. இதனால் ஹாசாரிபாக்கில் 6 பேரும், பகல்பூரில் 6 பேரும் குளிருக்கு பலியாயினர். இவர்களையும் சேர்த்து பீகார் மாநிலத்தில் மட்டும் 131 பேர் குளிருக்கு இரையாயினர்.

இது தவிர உருளை மொச்சை, பயிறுவகைகள், பட்டாணி. காய்கறிப் பயிர்களும். கால் நடைகளும் பெருமளவில் சேதமடைந்துள்ளன.

உத்திரப்பிரதேசத்தில் 56 பேர் குளிரினால் செத்தனர். தவிர மாடுகளும் பறவைகளும், செத்து மடிகின்றன. இவ்வளவு கோரமாக ஏழை மக்களும் கால்நடைகளும் செத்து மடிந்து கொண்டிருக்கும் போது, அம் மாநிலங்களிலும், மத்தியிலும் ஆட்சிபுரியும் காங்கிரஸ் அரசு அம் மக்களின் பாதுகாப்புக்கு எவ்வித நடவடிக்கையும் மேற் கொள்ளவில்லை.

ராஜஸ்தான், ஹரியானா, பஞ்சாப், உ பி, பீகார் முதலிய மாநிலங்களில் உறைபுள்ளிக்கும் மிகவும்குறைந்த சீதோஷ்ண நிலையே நிலவியது.

கடந்த 25ந் தேதியன்று டெல்லியில் கடந்த 10ஆண்டுகளில் என்று மில்லாத அளவுக்கும், பரேலியில் இதற்கு முன் என்று மில்லாத அளவுக்கும் கடுமையான குளிர் இருந்தது.

ஜனநாயகஆட்சியை அமைக்கும் போராட்டப் பாதையில்

# தொழிலாளி - விவசாயி வர்க்க அணியை உருவாக்குவோம்

## சி. ஐ. டி. யூ. தமிழ் மாநில மாநாட்டில் ரமணி தலைமையுரை

**சென்னை, டிச. 26— கிராமப்புற விவசாயத் தொழிலாளர்களையும் ஏழை விவசாயிகளையும் தொழிலாளி வர்க்கத்தின் தலைமையில் திரட்டினாலன்றி அரசாங்கத்தின் அடக்கு முறைகளை முறியடித்து தொழிலாளர் வர்க்கம் தன்னுடைய லட்சியப பாதையில் முன்னேறமுடியாது என்று சி. ஐ. டி. யூ. தமிழகக்குழு தலைவர் தோழர் கே. ரமணி சென்னையில நடைபெற்ற சி. ஐ. டி. யூ தமிழ் மாநில 2-வது மாநாட்டில் தலைமையுரையாற்றும்போது கூறினார். அவருடைய சுருக்கத்தைக் கீழே பிரசுரிக்கிறோம்:—**

உலகெங்கும் நடைபெறுகின்ற போராட்டங்களின் ஒரு பகுதியாக இந்தியாவிலும் தமிழகத்திலும், இக்காலத்தில் நடைபெற்றபல்வேறு போராட்டங்களில் நமது தொழிலாளிமக்களும் விவசாயத் தொழிலாளர்களும், ஊழியர்களும், பங்கு கொண்டு, கொடியஅடக்குமுறைக் குள்ளாகியுள்ளார்கள். வேலையிழந்தும். தடியடி, துப்பாக்கிப் பிரயோகம், ரவுடித் தாக்குதல்களுக்கு இரையாகியும்,உள்ளனர், சர்க்கரைத்தொழிலாளி தோழர் பொன்னுச்சாமி உயிர் துறந்தும் உள்ளார். நமது நன் மதிப்புக்குரிய தோழர்விபி சிந்தன்போன்ற தலைவர்கள், கொலை வெறித் தாக்குதல்களுக்கு உட்படுத்தப்பட்டனர், தொழிலாளி வர்க்கம் ரத்தம் சிந்தியும் போராடியுள்ளது. தியாக வரலாறு படைத்துள்ளது. அந்தத் தியாகிகளையும், போராடிய வீரர்களையும், நாம் பெருமையோடு நினைவில் இருத்துகிறோம். பாராட்டுகிறோம். இப்போராட்டங்களின் மூலம், நமது சி ஐ டி யூ உறுதிப்பட்டு வளர்ந்து வருகிறது. சகல பகுதி தொழிலாளிமக்களின் நன்மதிப்பைப் பெற்று வருகிறது என்பதை நீங்கள் காணலாம்.

நம் நாட்டு நெருக்கடியின் நேரடி அனுபவம் நமக்கு உணர்த்துகிற உண்மை என்ன? தொழிலாளிவர்க்கமும், விவசாயி வர்க்கமும். மற்ற உழைக்கும் மக்களும் கடுமையாக உழைத்து, உற்பத்தியை, நாட்டின் செல்வத்தை பன்மடங்கு பெருக்கியுள்ளார்கள். ஆயினும், விலையேற்றத்தைத் தடுக்கமுடியவில்லை என்பது மட்டுமல்ல, உற்பத்தி பெருகும்போது விலையும் வேகமாக ஏறுகிறது. உதாரணமாக நாட்டின் ஜீவாதாரமான உணவு உற்பத்தி பெருகியிருந்தும் விலைவாசி உயர்ந்துள்ளது. என்ற உண்மையை பார்க்கிறோம்.

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1961—62—ல் | 8 | கோடி | 29 | லட்சம் | டன் உற்பத்தி | விலை | 100 | புள்ளி |
| 1964—65—ல் | 8 | ” | 23 | ” | ” | ” | 146 | ” |
| 1965—66—ல் | 7 | ” | 23 | ” | ” | ” | 154 | ” |
| 1966—67—ல் | 7 | ” | 42 | ” | ” | ” | 183 | ” |
| 1967—68—ல் | 9 | ” | 51 | ” | ” | ” | 228 | ” |
| 1968—69—ல் | 9 | ” | 40 | ” | ” | ” | 201 | ” |
| 1969—70—ல் | 9 | ” | 95 | ” | ” | ” | 208 | ” |
| 1970—71—ல் | 10 | ” | 84 | ” | ” | ” | 207 | ” |
| 1971—72—ல் | 10 | ” | 47 | ” | ” | ” | 215 | ” |

என்று அரசாங்கத்தின் புள்ளி விவரக்கணக்குகளே காட்டுகின்றன. இக்கணக்குகள் சரியானவையல்ல. விலையேற்றத்தை குறைத்துக் காட்டுவதற்கு தரப்பட்டதாகும், அதைப் பார்த்தால் கூட உணவு உற்பத்தி இவ்வளவு பெருகியும் கூட விலைவாசி வேகமாக ஏறியுள்ளதைக் காணலாம் இதுபோல் சர்க்கரை, வகையருக்கள், துணி, நூல் போன்ற வாழ்க்கைத் தேவைப் பண்டங்கள் அனைத்திற்கும், இதைவிட பல மடங்கு விலைகள் ஏறியுள்ளன. ஏறிக்கொண்டே செல்கின்றன.

பாகிஸ்தான் யுத்தத்தினால். அகதிகள் வந்ததால், சில மாநிலங்களில் வரட்சி ஏற்பட்டதால்தான் விலை ஏற்றம் கட்டுமீறி உள்ளது என்று இந்திரா அரசு கூறுவது மக்களை ஏமாற்றும் பொய்ச் பிரச்சாரம் என்பது தெளிவாகிறது. உண்மை என்னவென்றால் சுரண்டல் வர்க்கங்களின் கொள்ளை லாபவேட்டையே காரணமாகும்.

போராட்டங்கள்தோன்றுவதும் வளருவதும், மேற்கண்ட முரண்பாடுகளின் விளைவுகளேயன்றி வேறல்ல உழைப்பாளி மக்களின், வருமானம் குறைந்து கொண்டே போவதால், வாழ்க்கையைப் பாதுகாக்க போராட்டங்கள் தவிர்க்க முடியாததாகிறது. தொழிலாளி மக்கள் பெறுகின்ற சம்பளப் பணத்தின் மதிப்பு வீழ்ச்சியடைந்துள்ளது குறித்து, பாராளுமன்றத்தில் உதவி நிதி மந்திரி கொடுத்துள்ள விவரங்கள், பார்த்தாலே தெரியும் 1949—ம் வருட விலைவாசி அடிப்படையில், ரூபாயின் மதிப்பானது:—

| | | |
|---|---|---|
| 1950—ல் | ... | 99பைசா |
| 1960—ல் | ... | 30.6பைசா |
| 1970—ல் | ... | 44.6பைசா |
| 1973—ல் (ஜனவரி — செப்டம்பர்) | ... | 36 பைசாவாக |

வீழ்ச்சியடைந்துள்ளது இதுவும் உண்மையான கணக்கல்ல. அரசு ஒப்புக் கொண்டுள்ள இந்தக்கணக்கைப்பார்த்தாலே மக்களின் வாழ்க்கை, எப்படிசீரழிந்து வருகிறது என்பதைஉணரலாம். அதை எதிர்த்துத் தான் போராட்டங்கள் வெடித்துக் கிளம்பி நடைபெறுகின்றன.

தமிழகத்திலும், சென்ற 2½ ஆண்டுகளில் எண்ணற்ற போராட்டங்கள்—மாநிலம் தழுவிய போராட்டங்கள் உட்பட நடைபெற்றுள்ளன. பஞ்சாலைத் தொழிலாளர் பொதுவேலை நிறுத்தம். சிம்சன் போராட்டம், பள்ளிப்பாளையம் பவர் லூம் போராட்டம், வால்பாறை தோட்டத் தொழிலாளர் போராட்டம், பரம்பிக்குளம், ஆழியார் தொழிலாளர்களின் 68 நாள் போராட்டம் ஆரணி பட்டுத் தொழிலாளர் போராட்டம் மதுரை கைத்தறி நெசவுத் தொழிலாளர் போராட்டம். சர்க்கரை ஆலைத் தொழிலாளர் போராட்டம், திருச்சி பாய்லர் தொழிலாளர் போராட்டம் என்ஜீனியரிங் தொழிலாளர் போராட்டம், சுகாதாரத்தொழிலாளர்போராட்டங்கள், தற்பொழுது நடைபெற்று வருகிற விக்கிரமசிங்கபுரம் பஞ்சாலை தொழிலாளர் போராட்டம் குமரி அரசு போக்குவரத்து தொழிலாளர் போராட்டம்—இதுபோன்ற அனைத்துபோராட்டங்களும் மேலே கூறப்பட்ட அடிப்படையில் நடப்பவைகளே. மத்திய மாநில அரசுகளின் போலீஸ் அடக்கு முறை பாதுகாப்புச் சட்டங்கள் போன்றவைகளை எதிர்த்து முறியடித்து இவை வளருகின்றன. இதனால்தான் அடக்குமுறைகளாலும் சாதிக்க முடியாததை, பிற்போக்கு தொழிற்சங்கவாதிகளின் பிளவுபடுத்தும்நடவடிக்கைகளால் சாதிக்க?மத்திய-மாநில அரசுகள் சி ஐ. டி. யூ. விற்கு எதிராகச் செயல்பட்டு வருகின்றன. தி. மு. க., ஐ. என்,டி.யூ.சி. ஏ. ஐ. டி. யூ. சி., எச். எம். எஸ், ஸ்தாபனத்தலைவர்கள் ஒற்றுமையின் பெயரால்; உள்ளிருந்து கொண்டே பிளவுவேலைகள் சரணாகதி, துரோக ஒப்பந்தங்கள் செய்து சீர்குலைக்கிறார்கள். இதையும் மீறி. தொழிலாளர்கள் கூட்டுக்கமிட்டிகளில்- கூட்டுப்போராட்டங்களில் ஒன்றிணைந்துநின்று வெற்றிகண்டு வருகிறார்கள். இந்த ஒற்றுமை உணர்வை மேலும் வளர்த்துமுன்னேற சி. ஐ. டி, யூ. அறைகூவல் கொடுத்து தீவிரமாகபாடுபடவேண்டும்.

உழைக்கின்ற மக்கள் அனைத்து பகுதிகளுக்கும் தலைவனாக தொழிலாளி வர்க்கத்தை வளர்த்துக் கொள்வதில் நமது முன்னேற்றம் மிகவும் குறைவு. கிராமப்புற விவசாயத் தொழிலாளிகளை, ஏழை விவசாயிகளை நம் தொழிலாளி வர்க்கத்தின் தலைமையில் திரட்டவில்லை என்றால் நமது வளர்ச்சியும், வெற்றிகளும் உத்தரவாதமாகாது.

நம்நாட்டில் ஒரு மககள் ஜனநாயக ஆட்சியை அமைக்கும் மகத்தானப் போராட்டத்தை நோக்கி முன்னேற அப்படிப்பட்ட பலத்தைத் திரட்டுவது நம் கடமையாக உள்ளதால்; தொழில் கேந்திரங்களைச் சுற்றியுள்ள கிராமங்கள் அனைத்திலும் விவசாயத் தொழிலாளிகளை முதலில் திரட்டுவது அவசியமென்று நாம் தொடர்ந்து பேசி வருகிற போதிலும் பெரும்பாலான நமது சங்கங்கள் அக்கடமையை நிறைவேற்ற முயற்சிப்பதில்லை. அதன் விளைவாக நம் தலைமையில் நடைபெற்று வருகிற சில நீண்ட போராட்டங்கள் கூட சில சந்தர்ப்பங்களில் உடைக்கப்படுவதற்கு அந்தக் கிராம ஏழை மக்களையே எதிரி வர்க்கங்கள் பயன்படுத்துவதை பார்க்கிறோம்.

நெல்லிக்குப்பம். கள்ளக்குறிச்சி சர்க்கரை ஆலைத் தொழிலாளர் போராட்டங்கள் குமரி அரசுஊழியர்போராட்டம் போன்றவை இதற்கு உதாரணங்கள். அந்த கிராம ஏழை மக்களையும் திரட்டி அரசாங்கத்தையும் முதலாளி வர்க்கத்தையும் நாம் நிர்ப்பந்திக்க முடியாமல் போகிறது. தொழிலாளி வர்க்கத்தின் போராட்டம் விரிவடைந்து முன்னேறுவதற்குக்கூட கிராமப் புற ஏழை மக்களை நம் தலைமையில்அவர்களுடைய கோரிக்கைகளுக்காகத் திரட்டி போராட வேண்டியது அவசியமாகும்.

போராட்டங்களில் பங்கு கொண்டு வெளி வருகிற நூற்றுக்கணக்கான தீவிரத் தொழிலாளிஊழியர்களுக்கு கொள்கைஅரசியல் பயிற்சியளித்து, ஸ்தாபன வேலைகளுக்கு பயிற்சியளித்து, அமைப்பாளர்கள் பொறுப்பானவர்கள், பிரச்சாரங்கள், இயக்கத் தலைவர்கள் என்ற நிலைக்கு உயர்த்தப்படுவது உடனடிக் கடமையாகக் கொள்ள வேண்டும்.

ஊழியர்களில்லாதபெருங்குறை நீக்கப்பட வேண்டும் அதற்குத் தேவையான இளம் தொழிலாளர்தோழர்கள், ஊழியர்கள் அனைவரையும், மிகுந்த கவனத்தோடு திரட்டிடுவோம்! ஒரு ஒப்பற்ற தொழிலாளிவர்க்க முன்னணிப் படையை நிறுவி முன்னேறுவோம்! தமிழகசி. ஐ.டி.யூவைப் பன்மடங்கு பலம்கொண்டதாக வளர்ப்போம்.

## ‘அகிம்சாவாதிகள்’ நடத்திய போராட்டத்தால் ரூ. 4 கோடி சேதம்

புனா, டிச 27— மகாராஷ்ட்ரா—கர்னாடக மாநிலங்களின் எல்லைப் பிரச்னையை ஒட்டி, அம்மாநிலங்களில் உள்ள காங்கிரசாரும், பிற பிற்போக்காளர்களும் அண்மையில் கலவர வெறியாட்டங்கள் நடத்தினார்கள் அல்லவா?

இந்தக் கலவரத்தில் 4 கோடி ரூபாய் மதிப்புடைய சரக்குகளும் வாகனங்களும் நாசமாக்கப்பட்டன.

இந்த தகவலை மகாராஷ்ட்ர மாநில லாரி இயக்குவோர் சம்மேளனப் பொதுச் செயலாளர் ஆர். குல்கர்னி தெரிவித்தார்.

மகாராஷ்டிரத்தில் பதிவான 31 லாரிகளும், கர்னாடகத்தில் பதிவான 9 லாரிகளும் நாசமாக்கப்பட்டன என்றும் தெரிவித்தார்.

இது தவிர மற்ற வாகனங்களும் பொதுஉடைமைகளும், பொதுமக்களின் உடைமைகளும், அகிம்சா மூர்த்திகள் நடத்திய இந்த எல்லைக்கிளர்ச்சியில் சேதப் படுத்தப்பட்டன.

## திருப்புத்தூர் தாலுகாவில் நீர்ப்பாசன வசதி செய்க

### விவசாயிகள் சங்க மாநாட்டில் கோரிக்கை

திருப்பத்தூர் டிச 28— முகவைமாவட்டம்திருப்பத்தூர் தாலுகாநீர்ப்பாசன வசதி பெறும் வகையில், ஏற்கனவே தீர்மானிக்கப் பட்டிருக்கும் காவிரி ஆறு—பாலாறு இணைப்பை உடனே நிறைவேற்ற வேண்டும் என்று திருப்புத்தூர் தாலுகா விவசாயிகள் சங்க மாநாடு வற்புறுத்தியுள்ளது.

இம்மாநாடு கடந்த மாதம் 28-ந் தேதியன்று காளப்பூரில் தோழர் எஸ். கிருஷ்ணன் தலைமையில் நடந்தது,

விவசாயிகள் சங்கக் கொடியை மதுரை—முகவை மாவட்ட மார்க்சிஸ்ட் கட்சிச் செயலாளர் தோழர் ஏ. பி. பழனிச்சாமி ஏற்றி வைத்து மாநாட்டை துவக்கி வைத்தார்.

தாலுகா விவசாயிகள் சங்க உபதலைவர் தோழர் பி. வெங்கடாசலம் பிரதிநிதிகளை வரவேற்றுப்பேசிய பின்பு தாலுகா செயலாளர் தோழர் பி. சி. சி. பெரியய்யா அறிக்கையை சமர்ப்பித்தார்.

விவசாயிகள் சங்க இயக்கத்தைப் பற்றியும், மத்திய மாநில விவசாயிகள் சங்க முடிவுகள் குறித்தும், இன்றைய அரசியல் நிலைமை குறித்தும், மாநில விவசாயிகள் சங்க நிர்வாகக்குழு உறுப்பினர் தோழர் என். வரதராஜன் பேசினர்.

அதன் பின்பு செயலாளர் அறிக்கை மீதான விவாதத்தில் ஏராளமான தோழர்கள் கலந்து கொண்டனர்.

மாவட்ட விவசாயிகள் சங்கத் தலைவர் கே. பி. ஜானகியம்மாள், செயலாளர் வி. ஏ. கருப்புசாமி ஆகியோர் தொகுப்புரை வழங்கினர்.

### தீர்மானங்கள்

காவேரி ஆற்றில் திருச்சி ஜில்லா குளித்தலை தாலுகா பட்டவர்த்தலை கிராமத்திலிருந்து ஒரு கிளைவாய்க்கால் வெட்டி பாலாற்றில் (பொட்டப்பட்டிக்கருகில்)இணைத்து திருப்புத்தூர் தாலுகாவிற்கு நீர்ப்பாசன வசதி கொடுக்க நீண்டகாலமாகவே தீர்மானிக்கப்பட்டிருந்தும், இதுவரையிலும் இத்திட்டத்தை நிறைவேற்றி வைக்க எவ்வித நடவடிக்கையும் எடுக்க வில்லை.திருப்புத்தூர் தாலுகா எவ்வித நீர்ப்பாசன வசதியுமற்ற பின் தங்கிய பிரதேசமாக இருப்பதால் உடனடியாக மேற்படி திட்டத்தை நிறைவேற்றும்படி தமிழக அரசை இம்மாநாடு வற்புறுத்திக் கேட்டுக் கொண்டது.

மற்றும் தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்தியும், சிலி மக்களின்போராட்டத்திற்கு ஆதரவு தெரிவித்தும், மலிவு விலைக் கடைகள் திறக்கக் கோரியும், உரம் பூச்சி மருந்துகள் நியாய விலையில் தாராளமாக விநியோகிக்க கோரியும், விவசாயிகள் விளைவிக்கும் பொருள்களுக்கு நியாய விலை நிர்ணயம் செய்யக் கோரியும், விவசாயிகளுக்கு கடன் நிவாரணம் கோபயும் முமரி மாவட்ட அரசுப்போக்கு வரத்துதொழிலாளர்கள் போராட்டத்திற்கு ஆதரவு தெரிவித்தும் தீர்மானங்கள்நிறைவேற்றப்பட்டன.

### புதிய நிர்வாகிகள்

தாலுகா விவசாயிகள் சங்கத்துக்கு எஸ். கிருஷ்ணனைத் தலைவராகவும், பி. வெங்கடாசலத்தை உப தலைவராகவும் பி, சி. சி. பெரியய்யாவை செயலாளராகவும் மற்றும் 4 பேர் கமிட்டி உறுப்பினர்களாகவும் கொண்ட புதிய நிர்வாகக் குழு தேர்ந்தெடுக்கப்பட்டது.

### ஊர்வலம்

மாநாட்டின் இறுதியில் பிரதிநிதிகள் முன் செல்ல, ஏராளமான தோழர்களும் விவசாயிகளும் கலந்து கொண்ட ஊர்வலம் புறப்பட்டது.

முக்கிய வீதிகள் வழியே வானொலித் திடலை அடைந்தது. அங்கு நடந்த பொதுக்

(8-ம் பக்கம் பார்க்க)

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ்மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6/16 பைபாஸ் ரோடு மதுரை-625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே.முத்தையா.

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

கூட்டத்துக்கு தோழர் பி. சி. சி. பெரியயாதலைமை வகித்தார்,

தோழர்கள் என் வரதராஜன், கே பி ஜானகியம்மாள், வி ஏ கருப்புசாமி. மு காசிநாதன். எஸ கிருஷ்ணன் ஆகியோர் விவசாயிகள் பிரச்சினைகள், கோரிக்கைகள் குறித்தும். மததிய மாநில அரசுகளின் மக்கள் விரோத—விவசாயிகள் விரோத கொள்கைகளை அம்பலப்படுத்தியும் பேசினர்.

பரம்பிக்குளம்-ஆழியார் திட்டத்தில்

## நீக்கப்பட்ட 300 பேருக்கும் மீண்டும் வேலை தருக

### பழனியில் ஆர்ப்பாட்டம்

பழனி, டிச 26— பரம்பிக்குளம் —ஆழியார் திட்டத்தில் அநியாயமாக வேலை நீக்கம் செய்யப்பட்ட 300 நாட் கூலித் தொழிலாளர்களையும் மீண்டும் வேலைக்கு எடுத்துக் கொள்ளக் கோரி இங்குள்ள பொதுப் பணி தொழிலாளர்கள் ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

### கொட்டும் மழையிலும்...

இத்தொழிலாளர்கள் சங்கச் செயலாளர் இராமகிருஷ்ணன் தலைமையில் சுப்ரமண்யபுரத்திலிருந்து ஊர்வலமாகப் புறப்பட்டனர். கடுமையாக மழை பெய்த போதிலும் அதனைப் பொருட்படுத்தாது ஆவேசமாக முழக்கங்களை எழுப்பிக் கொண்டு முக்கிய வீதிகள் வழியாக பாலாறு—பொருந்தலாறு கோட்டப் பொறியாளர் அலுவலகத்தை அடைந்தனர்.

வேலை நீக்க நோட்டீசை வாபஸ் வாங்கு! வேலை நிரந்தரம் வேண்டும்! தொழிலாளர்களைப் பாதிக்கும் அரசு ஆணை எண் 142ஐ ரத்துச் செய்! போன்ற முழக்கங் எழுப்பி ஆர்ப்பாட்டம் செய்த பின்னர் கோரிக்கை மகஜர் ஒன்றினைக் கூட்டத்திடையே படித்த பின்னர்- அதை நிர்வாகப் பொறியாளரிடம் சங்கக்கிளை உதவிச் செயலாளர் பி. டி. அந்தோணி கொடுத்தார்.

பின்பு ஊர்வலம் சுப்ரமண்யபுரத்தை அடைந்தது. அங்கு நடந்த கூட்டத்தில் மதுரை—முகவை மாவட்ட விவசாயிகள் சங்கச் செயலாளர் தோழர் வி ஏ கருப்புசாமி பேசினார்.